Specimen Copy
23/4/28

# CHANDRA MANEKA

# சந்திர மேனகா

ஒரு இனிய தமிழ் நாவல்

BY

கமலவாஸன்.



33 1/3 p.c. for commission sale
40 p.c. for ready cash for 50 copies
50 p.c. " 100 copies
23/4/28

# CHANDRA MANEKA.

# சந்திர மேனகா

ஒரு இனிய தமிழ் நாவல்

BY

கமலவாஸன்.

# முகவுரை.

---

"பொருப்பிலே பிறந்து தென்னம் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலேயிருந்து வையை ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே பயின்று கற்றோர் நெஞ்சிலே கிடந்தோரென
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள்."

என்று பெரியோர் கொண்டாடும்படி மகோன்னத திசையை முற்காலத்திலே அடைந்திருந்த நமது இனிய தமிழ் பாஷையானது சிலகாலமாக நந்தமிழ் நாட்டாரால் பெரிதும் அலக்ஷியம் செய்யப்பட்டு வந்து இப்பொழுது ஏதோ நல்லகாலமாக சிறிது தலைதூக்கி ஆரம்பித்திருக்கிறது. இது கம்பர், புகழேந்தி, காளமேகபுலவர், ஒட்டக்கூத்தர், வில்லி, பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் முதலிய மகாவித்வான்கள் காலத்திற்போல சிறந்து விளங்காவிடினும் இருபதுவருஷத்திற்கு முன்போல் அடியோடு கவனிக்கப்படாமல் இருக்கவில்லை.

நாகரீகம் முதிர்ந்த இக்காலத்தில் நாவல் எழுத நானருகனில்லை என்பதை நான் அறியாமலில்லை. ஆயினும் நம் தமிழ் பாஷையின் முன்னேற்றத்திற்காக யான் இச்சிறு நாவலை எழுத துணிந்துளேன்.

இந்நூலில் தானம் தலைகாக்கும் என்பதும், அரசன் தருமத்தினின்றும் தவறுதொழுகி தீயவைகளை ஒழித்து வீரத்தில் குறையாது ஒழுகல் வேண்டுமென்பதும், ஊழின் பெருவலி வேறில்லையென்பதும், தெய்வபக்தி, இராஜ தந்திரம் முதலிய எண்ணிலா நந்நீதிகளை இந்நூலில் பரக்க காணலாம்.

கற்றறிந்த இப்பெரியோர் நிறைந்த இப்பூவுலகின்கண் கல்லாக்கசடன் யான் நூலெழுதுவதானது "கானமயிலாட" என்ற பாட்டை ஒக்கும். இந்நூலில் குற்றம் குறைகள் இருப்பினும் "பித்தர் சொன்னதும், பேதையர் சொன்னதும், பத்தர் சொன்னதும், பன்னப்பெறுபவோ" என்றபடி அவைகளை ஒரு பொருட்டாக எண்ணாமல் இந்நூலை அங்கீகரிப்பாராக.

பிரபவ-ஹு
தை-மீ 22உ.

இங்ஙனம்
நூலாசிரியன்.

# சந்திரமேனகா.

## முதல் அத்தியாயம்.

நீர்வள, நிலவளம் பொருந்தியதாயும், தங்கமுலாம் பூசப்பட்டு தக, தகவென ஜ்வலித்துக் கதிரவனையொத்த காந்தியை வீசும் அநேக அரண்மனைகளும், கூடகோபுர, மாட மாளிகைகளும், அநேக விதமான நதிகளும், குளங்களும், நட வாவிகளும் சூழப்பட்டதாயும், பக்கங்களினின்றும் வீசும் மல்லிகை, முல்லை, ரோஜா, பாதிரி, பன்னீர், சம்பங்கி, ஜம்பகம், இச்சி, இருவாட்சி, மருதாணி, மனோரஞ்சிதம், கொன்னை, கனகாம்பரம், முதலிய புட்பங்களின் நறுமணம் பட்டணத்திற்குள் கமழ்ந்து எப்பொழுதும் ஜனங்களை களிப்பித்துக் கொண்டிருப்பதாயும், குறைவற்று மாதமும்மாரி பெய்து பூமி செழித்து விளைவு ஓங்கிக் குடிகளுக்குக் கொஞ்சமேனும், வறுமை யென்னும் வியாதியில்லாததுமான மோகினிபுரி, யெனும் நகரத்தை மகாநந்தன் என்னுமரசன், அறிவு, ஆண்மை, ஈகை, இரக்கம், பச்சாதாபம் முதலிய நற்குண நற்செய்கைகளுடன், செங்கோல் செலுத்திக் கொஞ்சமேனும் நீதி தவறாமல் பரிபாலனம் செய்து வந்தான். ஒரு நாள் இரவு சுமார் ஏழு மணிக்கு, அந்நகரின் நடுவில் நடுநாயகம் போல் விளங்கும் மிகவும் உன்னதமான வேலைப்பாடுகளுடன் விளங்கின அரசன் அரண்மனையின் மேல் உப்பரிகையின் ஓர் ஹாலில் மிகவும் ப்ரகாசமாய், பச்சை, சிகப்பு, ஊதா, நீலம், ஆரஞ்சு, பர்பிள், ரோஸ் முதலிய பலவித மான கலர்களுடன் கூடின பல்புகளையுடைய எலக்டிரிக் லைட்டுகள் ஜ்வலித்தன. அநேக விதமான, சேர்கள், ஈசிச்சேர்கள், சோபாக்கள், டேபில்கள், ரவுண்டு டேபில்கள், பீரோக்கள், கண்ணாடி பீரோக்கள், நிலைக்கண்ணாடிகள் யாவும் பார்ப்போர் ப்ரமிக்கும்படி இடப்பட்டிருந்தன. இன்னும் தந்தங்கள், சல

வைக்கற்கள், மற்றுமுயர்ந்த மரங்கள் முதலியவைகளால் கை தேர்ந்த சிற்பிகளினால் கடைந்தெடுக்கப்பட்ட பதுமைகள் மிகவும் ஆடம்பரமாய் மியூஸியம்போல் தகுந்த ஏற்பாடுகளுடன் அமைக்கப்பெற்றிருந்தன. இவைகளின் இடையில் பச்சை வெல்வட்டினால் தைக்கப்பட்டு, செடி, கொடிகளைப்போல் ஜரிகை வேலைப்பாடுகள் செய்து, பொன்னினால் சிங்கமுகக்கால் கள் நாட்டி ஜாஜ்வல்யமாய் ஜ்வலிக்கும் ஒரு சோபாவின் மீது, அரசன் கவலையுற்ற முகத்துடன் கண்ணீர் ததும்ப, தலைகுனிந்த வண்ணம் அசைவற்று வீற்றிருந்தான். அச்சமயம் கொடி மின்னலையொத்து, தங்கப்பதுமை போன்ற சரீரம் வாய்ந்து, நக்ஷத்திரக்கூட்டங்களைப்போன்ற அநேக இரத்தினாபரணங்கள் டாலடிக்க, இடையில் கட்டியிருக்கும் பட்டாடை மினு மினுக்க மேகத்தையொத்து அடர்ந்து, நீண்டு, கருத்து, செழித்து, சுருட்டை சுருட்டையாக வளர்ந்து வந்திருக்கும் அளகபாரத் தை, முழங்கால் வரை, ஜடை பின்னி, வாசனை மலர் சூடி, வைர ஜடைபில்லைகள் நடுவில் நடுவில் விட்டு விட்டுப்ரகாசிக்கக் காலி லணிந்திருக்கும் பொன் சிலம்பு மெட்டிகளின் சப்தம் கலீர் கலீரென்று ஒலிக்க மெல்லென அன்னம்போல் நடந்துவந்து, அரசனிடம் நின்று நமஸ்கரித்து, வணங்கி பக்கத்தில் நின்றாள், நமது அரசியான மதுரவேணி. தன் மனைவி வந்ததையும் கவனி யாமல் கவலையுடன் தலைகுனிந்தவண்ணம் தங்கியிருக்கும் தன் தலைவனைக் கண்ணுற்ற மதுரா, உடல் பதறி, உள்ளம் ஏங்கி தன் பர்த்தாவுக்கு யாது கவலை நேர்ந்ததோவெனத் தவித்து, அச்சங் கொண்டு, தன் குயிலெனக் குரலை வெளிப்படுத்தி பிராண நாதா வென அழைத்தாள். உடனே அரசன் தலை நிமிர்ந்து தன் காதலியைக் கண்டு மதுரா, எப்பொழுது நீ இவ்விடம் வந்தாய் என்று வினவ, நாதா, நான் இவ்விடமணுகி ஒரு நாழிகை பரி யந்தமாயிற்று. தாங்கள் என்ன காரணமோ, இன்று மிக, முக வாட்டத்துடன் அமர்ந்திருந்தீர்கள். அடியாள் யாதாகிலும் தப்பிதம் செய்திருந்தபோதிலும் சிறியோர் செய்த சிறு பிழை யெல்லாம் பெரியோராகில் பொறுப்பது கடனே யென்றபடி பெரியோ ராகிய தாங்கள் பொருத்து என்னை மன்னித்துக் காத்தருள

வேண்டுமாய்க் கோருகிறேனென்று அரசன் பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்தாள். உடனே அரசன் தன் இருகரங்களினலும் வாரியெடுத்து மார்போடணைத்து என் கண்மணியே, நீ ஏன் இவ்விதம் அஞ்சுகின்ருய், உன் மீது யாதும் தப்பிதம் நேரிடவில்லை. நீ அதற்காக அழவேண்டாம். என் பக்கத்தில் உட்கார், என்று கூறித் தன் மனைவியைத் தன்னருகில் உட்கார்த்தினன்.

ம—நாதா, தாங்கள் என்றும் இவ்விதமான முகவாட்டமடைந்தது கிடையாது. இப்பொழுது, என் விஷயத்தில் குற்றமில்லாவிடில், ராஜ்ய விஷயத்தில் ஏதாவது கவலை நேர்ந்ததா, அல்லது தங்கள் திருமேனியில் ஏதாவது அசௌக்கியம் நேர்ந்ததா, சீக்கிரம் எனக்கு உரையுங்கள். என் மனம் தடுமாறுகின்றதே !

அ—என் கண்மணி !! என் வர்த்தத்தை நான் எப்படி வெளியிடுவேன் ! நான் எவ்வாறு மொழிவேன் !!

ம—நாயகா, தங்களுக்கு அப்பேர்ப்பட்ட வியாகூலம் நேர்ந்ததின் காரணம் யாதோ ?

அ—ப்ரியே, நமக்குக் கடவுளினருளால் சகல சம்பத்துக்களும் குறைவின்றி நிறைந்திருக்கின்றன. ஆனல்........என்று கண்ணீர்த்துளிகளை மள, மளவென்று முத்துக்களைப்போலுதிரவிட்டான்.

ம—காதலா, இவ்வளவு விசனம் நேரிடக் காரணம் யாதோவெனக்கூறித் தன் முந்தானையினுல் கண்ணீரைத்துடைத்து மயில் தோகையினுல் மெல்லென வீசி, தங்களுக்குப்ரியமில்லாவிடில் ஆயாசத்துடன் கூறவேண்டாம் ; பிறகு ஆகட்டும்.

அ—என் கண்ணே, ப்ரியசகி, எனக்கு ஒரு ஆயாசமுமில்லை; என் குறையை உன்னிடம் கூருமல் வேறு எவரிடம் நான் கூறுவேன். எனக்குப் பிற்காலம் என் செங்கோலைத் தாங்கி மன்னுயிரைத் தன்னுயிர்போல் பாவித்து பரிபாலனம் செய்ய ஓர் புத்திரபேறில்லாமலிருக்கிறேனேயென்னும் கவலை தான் என்னை மிகவும் வாதைப்படுத்துகின்றது.

ம.—கொஞ்சம் புன்முறுவலடைந்து, நாதா, ஏது தாங்கள்

இப்பொழுதிருந்த நிலையைக் கண்டு நான் மிகவும் நடுங்கிவிட்டேன். இந்தக் காரியம் தெய்வவசத்தினாலல்லவோ ஈடேற வேண்டும், இதற்காக தங்கள் மனம் இவ்வளவு கோழைத்தன மடைவது சரியா ?

அ.—அடீ, மதுரவேணி, நீ கூறுவதுபோல் தெய்வவசத்தினால்தான் நடைபெற வேண்டும். நான் அதற்காகச் செய்ய வேண்டிய விஷயங்கள் யாதோ, தெரியவில்லை. நம் முன்னோர்கள் தங்களுக்கு இஷ்டமுள்ளவரையில் அரசு செலுத்திப் பிறகு புத்திரனுக்குப் பட்டமளித்துக் கானகமடைந்து ராஜரிஷிகளாகி ஸ்வர்க்க பதவியை யடைந்தனர். நாம் எந்தப் புத்திரனிடமளிப்பது ! அஃதுமன்றி புத், எனும் நரகம் எப்படி தாண்டுவது ! ! என்று பரிதபிக்க.

ம.—நாதா, தாங்கள் விவரித்துக்கூறின மொழிகள் யாவும் பசுமரத்தாணிபோல், என் மனதில் பதிந்து என்னை வாதைப்படுத்துகின்றன. நாம் முன் ஜன்மாவில் என்ன பாபம் செய்தோமோ, அதை யனுபவிக்கின்றோம்; என் செய்வது ! நம் நாட்டில் தர்மங்கள் சரிவர நடந்து வருகின்றதா, நம் குடிகளும் கொலை, களவு, சூது முதலிய பாபச் செயல்களை செய்யாமல் இருக்கின்றார்களா ?

அ.—ப்ரியே உன் புத்திக் கூர்மையை நான் என்னவென்று கூறுவேன். நான் இவைகளை அதிகமாய்க் கவனியாவிட்டாலும் நம் முதன் மந்திரியான மதியூகி, நம் வருத்தங்களையறிந்து, அநேக சத்திரங்கள் கட்டி அன்னதானமளிக்கும்படிக்கும், நம் நகரத்திலுள்ள ஆலயங்கள் எல்லாவற்றிற்கும் அபிஷேக, ஆராதனைகள் நடத்தி வைக்கவும், அநேக குளங்கள் கட்டும்படியாகவும் உத்தரவு செய்திருப்பதாகவும் இக்காரியங்கள் ஒரு மாத காலமாய் சரிவர நடந்து வருவதாகவும் நேற்றையதினம் என்னிடம் கூறினான். அஃதுமன்றி நம்முடைய அரண்மனை வாயிலில் அன்னக்கொடியும், ஆராட்சிமணியும் கட்டி எந்த வருணத்தினர் வந்தபோதிலும் நாஸ்தி என்னும் சொல் வராதபடி, கோதானம் பூதானம், ஸ்வர்ணதானம், அன்ன, வஸ்திர தானங்களும், இன்னுமநேக விதமான தானங்களும் செய்யும்படி கட்டளை யிட்டி

ருக்கின்ருன். நாம் செய்த பாக்கியத்தினுல் நம் மதியூகி நம்முடைய விஷயத்தில் மிகவும் சிரத்தை யெடுத்துக்கொண்டிருக்கிருன். இவைகளைத் தவிர வேறு ஏதாவது செய்வதுண்டானுல் நீ கூறுவாய், அவைகளை நடத்த நான் தயாராகவிருக்கின்றேன்.

ம.—பர்த்தாவே, இனி வேறு தர்மங்கள் யாது இருக்கிறதென்று கூறுவேன். இனி ப்ரஜைகள் ரக்ஷகனுன அந்த பகவான் தான் நம்மீது இரக்கங்கொண்டு புத்திரப்பேறையளிக்க வேண்டும். தாங்கள் கவலையை விட்டுவிடுங்கள். இரவு வெகு நாழிகையாகிவிட்டது. கவலை மேற்கொண்டு சரியான ஆகார நித்திரையின்றி தங்கள் திருமேனி மிகவும் வாட்டமடைந்து விட்டது. இனிக் கவலைப்படாதீர், அனுதஹ தேய்வரக்ஷக, என்றபடி நம்மைக் கடவுள் கைவிடார், எழுந்திருங்களென்று கூறி அங்கு தாதிகளால் வைக்கப்பட்டிருந்த ஆவின் பாலைப் பொற்கிண்ணத்திலூற்றி அரசனுக்களிக்க, அந்த ராஜனும் தன் மனைவியின் நற்குணத்தைக் கண்டு வியந்து, ஆச்சரியங் கொண்டு சந்தோஷ சித்தனுகி, பாலை வாங்கிப் பருகிவிட்டுத் தன் பள்ளியறை சென்று ஹம்சதூளிகா மஞ்சத்தில் மனைவியுடன் சயனித்து நித்திரை புகுந்தான். இவ்வாறு சில நாட்கள் சென்றதும் அரசன் நடத்தின தருமங்களின் பலனுலும், ஈசன் செயலினுலும், மதுரவேணி கருப்பவதியாகினள்: அதையறிந்த அரசன் அகங்குளிர்ந்து உளம் பூரித்துச் சந்தோஷ சித்தனுகித் தன் மனைவி விரும்பும் பண்டங்களை யாதொரு தடையுமில்லாமல் வரவழைத்துக் கொடுத்து மிகவும் ஆநந்தங்கொண்டிருந்தான். மதுரவேணிக்கு முறைப்படி பத்து மாதங்கள் கடந்து ப்ரசவ காலம் சமீபிக்கவே அநேக மருத்துவ ஸ்திரீகளும், டாக்டர் பரிக்ஷை பாஸ் செய்த லேடிமார்களும், தாதிமார்களும் காவல் புரிந்து வந்தனர். அரசியும் கடவுளின் அனுக்கிரகத்தினுல் சுகப்ரசவமாய் கோடி சூரிய உதயம்போல் ஒரு பெண் மகவை ஈன்றனள். தூதுவர்களாலறிந்த மகாநந்தன் ஆனந்த ஸாகரத்தில் மூழ்கி, களிப்பெனுங்கடலில் நீந்தி, நதிப்புலனில் நீராடி, தானந் தருமங்களும், சந்தன, புஷ்ப தாம்பூலாதிகள், சர்க்கரை,

கற்கண்டுகள் எல்லாம் எதேஷ்டமாய் அந்தணர்களுக்கு வழங்கிப் பதினெண் வாத்தியங்களுமுழங்கக் கொலுவிலமர்ந்து அரசு செலுத்தி பத்துநாளும் கடந்த மறுநாள் விதிப்படி புண்யாவசனம் நடத்தி நவரத்தினகசிதமான ஆணிப்பொன் தொட்டிலில் இடப்பட்ட பட்டு மெத்தையின்மீது சர்வாபரண பூஷிதையாய்க் குழந்தையைத் தன் கையினுல் விடுவித்துப் புரோகிதரை வரவழைத்துக் குழந்தைக்கு நாமகரணம் செய்யும்படி வேண்ட, அந்த குருவும், குழவியின் ரூபலாவண்யத்தையும், சுபலக்ஷணங்களையும் கண்டு, ஆநந்தங்கொண்டு, வேந்தே. இம்மதலை, சாமுத்ரிகா லக்ஷணப்படி, யாதொரு குறைவுமன்றி தெய்வலோகப் பெண் போன்று இருப்பதால், **மேனகா** என்று நாமகரணம் செய்வது உசிதமென்று எனக்குத் தோன்றுகிறது. பிறகு தங்களுடைய விருப்பம் என்றுர். மகிபதியும் மனமகிழ்ந்து, குருவைப் பணிந்து, குழந்தையை **மேனகா**வென்று முப்முறை அழைத்து என் கலிதீர்க்க வந்த கண்மணியே என்று உச்சிமோந்து, அவ்விடம் வந்து நிறைந்திருந்த பல தேச மன்னர்களுக்கும், ராஜகுமாரர்களுக்கும், ராஜபத்தினிகளுக்கும் உபசாரம் செய்யும்படி கட்டளையிட்டு, குருதக்ஷிணை யீந்து, தன் மகவையெடுத்துச் சென்று மனைவியிடமீந்து தன்னரண்மனை ஏகலுற்ருன். அரசனும், அரசியும் மேனகாவை நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமும்மாக மிகப்ரேமையுடன் வளர்த்துவர, மேனகாவும் வளர்பிறைச் சந்திரனைப்போல் நாளுக்கு நாள் வளர்ந்து தன் மழலை மொழிகளினுலும், தளர் நடையினுலும், தாய், தந்தையரையும் மற்றும் யாவரையும் களிப்பித்து வரும் நாளில், தெய்வகதியாய் அரசிக்கு வியாதி நேரிட, அதைக்கண்ட அரசன் மிகவும் மனம் நொந்து, பெரிய ஸர்ஜன்களாலும், ஆங்கில டாக்டர்களாலும், ஆயுர்வேத டாக்டர்களாலும், மாந்திரீகர், ஜோதிஷர் முதலியவர்களாலும், வேண்டிய சிகிச்சைகள் செய்யும்படிக் கட்டளையிட்டான். என்ன செய்தும் விதியை வெல்வது யாரால் முடியும்?

மலைமிசைத் தோன்று மதியம் போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினு ரென்றெடுத்துத் தூற்றப்பட்டாரல்லா
லெஞ்சினு ரிவ்வுலகத்தில். என்றபடி யானை மேலேறி அரசு செலுத்திய அரசர்களும் இறந்தார்களே யொழிய, இருந்தார் எவருமில்லை. அப்படிப்போல் மதுரவேணிக்கும் அவள் கால இறுதி சமீபித்து தேகம் செளக்கியப்படாமல் வியாதி நாளுக்குநாள் விருத்தியாகி இறக்கும் தருவாய் நேரிட அதையறிந்த அரசி தனக்குத் தானே துக்கித்துத் தன் மதலையை வாரியெடுத்து மார்புறத்தழுவிக் கண்ணீருதிர்த்து என் கண்ணே, கற்பகமே, கிளியே, மேனகா, சைக்கேட்டினது வாய்க் கேட்டவில்லையே. வெகுநாட் களித்துக் கடவுளி னருளால் உன்னை ஈன்றெடுத்தும், உனக்குத் தக்கவயதில் நீ ஒரு மணாளனை யடைந்து நீங்கள் சந்தோஷிப்பதை பார்க்க, பாக்கியம் செய்யாமல் இன்றே இம்மண்ணுலகைப் பிரிந்து விண்ணுலகிற்கேக ஈசன் என் தலையில் விதித்தானே! என் செய்குவேன்!! என் செல்வமே! என் கண்மணியே!! யென்று கண்ணீர் விட்டு துக்கித்துத் தன் அந்தரங்கத் தோழியின் மகளும், வயதில் சிறியவளும், மதியிற் சிறந்தவளுமான தாராவதியென்னும் சிறுமியைத் தனிமையாக வரவழைத்து, தாராவதீ! உன் தாய் என்னிடம் எவ்வளவு அன்பாகவும், பக்ஷமாகவும் இருந்தனளோ, அதைப்போல் நீ மேனகாவிடம் தாய் போலவும், தோழியாகவும் நடந்து கொள்ள வேண்டும். எனதுயிர் இன்னும் சில நாழிகையில் எமனுலகு நாடிவிடும். இனி நீ தான் அவளை ஆதரிக்கவேண்டும். அப்படிச் செய்வதாக எனக்கு உன் மனப்பூரிப்புடன் வாக்களிப்பாய் என்றதும், அதைச் செவியுற்ற சிறுமி கோடையிடி கேட்ட நாகம் போல் பதை பதைத்துத் துக்கமேலிட்டு, ராஜ, ராஜேஸ்வரி! அன்று முதலின்றுவரை அன்னவஸ்திரமளித்து, அன்புடன் ஆதரித்து வந்த தாயே, தங்களுக்கு ஏன் இப்படி அதைரியம் நேரிடுகிறது. நீங்கள் வீணாக மனதிற்குக் கவலை கொடுக்காதீர்கள். தங்களுக்கு யாதொரு அபாயமும் நேரிடாதபடி பகவான் ரக்ஷிப்பார்.

நான் சென்று அரசனை அழைத்து வருகின்றேன். உத்தரவு கொடுங்களென்று கூற,

அ.—(கொஞ்சம் நகைத்து) என் அன்பிற்குகந்த சிறுமியான தாராவதியே! விதியை வெல்ல யாரால்முடியும். என்னைப் பற்றி நீ கவலை கொள்ளாதே. நான் உன்னைக் கேட்டுக் கொண்ட வரத்திற்கு உத்தரவளிப்பாய்.

தா.—அம்மணீ. தங்களுத்தரவுப்படி நடக்கத் தயாராக விருக்கிறேன். கவலைப்படாதீர்.

அ—தாரா, மேனகாவைக் காப்பாற்றுவது உண்மையா? எந்தக் காரணத்தைக் கொண்டும் நீ அவளை விட்டுப்பிரியக் கூடாது.

தா.—தாயே. தடையின்றி நான் காப்பாற்றுகிறேன். அரசனும், மேனகாவைக் கைவிட மாட்டார். இளவரசியைப் பற்றி தாங்கள் விசாரப்படவேண்டாம். ஆனால் தங்களுடைய மரணம் சமீபமானதைப்பற்றி வர்த்தமாயிருக்கிறது. அரசனிடம் எவ்வாறு தங்கள் நிலைமையைக் கூறுவது; எப்படி அவரை இங்கழைத்துவருவது; என்தாயே, கூறுங்கள்.

அ.—தாரா. சற்றுப் பொறு. நான் ஒரு உதாரணம் கூறுகின்றேன். அதை நீ நன்றாய் கேட்டு விட்டுப் பிறகு செல்வாய்.

தா.—அப்படியே செய்கிறேன் தாயே.

அ—அஃது யாதெனில் முன்னொரு காலத்தில் நரேந்திரனென்னுமோரரசன் வெகுநாட் தவஞ்செய்து சாரங்கதரனென்னுமோர் புத்திரனை யடைந்தார். சாரங்கதரனும் மிகவும் மேன்மையாய் வளர்ந்து பால்யப் பருவங்கடந்து வாலிபதசையடைய, அதைக்கண்ட தந்தையான நரேந்திரன், மகனுக்கு மணமுடிக்க யத்தனித்து சாரங்கதரனைப்போல் படமெழுதித் தூதுவர் வசம் கொடுத்து ஐம்பத்தாறு தேசங்களுக்கும் அனுப்பிவைத்தார். நன்றாய் செவியுற்றுக்கேள். தாரா!

தா.—அப்படியே கேட்கிறேன். தெளிவாய்க் கூறுங்கள்

அ.—தூதுவர்களும் எல்லா தேசங்களும் சென்று அவன் ரூபத்திற்கேற்ற பெண்ணகப்படாமல் மனஞ்சலித்துக் கடைசி

யில் பாண்டிய நாட்டையணுகி, அதைப் பரிபாலனம் செய்து வந்த சித்திராங்கதன் என்னும் அரசனிடம் வந்து, தாங்கள் கொணர்ந்த படத்தையளித்து, அதன் வரலாற்றையும் கூறினர். அவ்வரசனுக்குச் சித்திராங்கி என்னும் புத்திரி ஒருத்தியுண்டு. அவளுக்கேற்ற கணவனகப்படாமல் அவள் கன்னியாயிருந்ததனால், மிகவும் ரூபவானான சாரங்கதரனின் படத்தைக் கண்டு களிப்பெய்தித்தன் மகளை யழைப்பித்துக் காண்பித்தான். சித்திராங்கியும் படத்தைக்கண்டு ஆச்சரியங்கொண்டு, ஆஹா, இம்மகானுபாவரின் அழகை என்னென்று கூறுவேனென்று வியந்து, மணஞ்செய்ப விருப்பித் தன சம்மதியைத் தந்தையிடம்கூற, அவரும் மனமகிழ்ந்து தன்புத்திரியின் படத்தைத் தூதுவரிடமளித்து, இப்படத்திலுள்ள ராஜகுமாரனுக்கு என் புத்திரியை அளிக்க யாதொரு தடையுமில்லை என்று கூறிச் சன்மானம் செய்து உங்களரசனின் மனவிருப்பத்தையறிந்து கூடிய சீக்கிரததில் மணமுடிக்க ஏற்பாடு செய்யுங்களென்று அனுப்பினான். என்ன தாராவதி! கவனித்தாயா?

தா.—நன்றாய் கேட்கிறேன். தாமே சொல்லுங்கள்.

அ.—தூதுவரும் சித்தராங்கியின் படத்தை யெடுத்துவந்து தங்கள் தேசமடைந்து நரேந்திரனிடம் படத்தையளித்து வணங்கி, சித்தராங்கதன் கூறின மொழிகளையும் கூறிக் கல்யாணம் செய்யவேண்டுமென்றனர். நரேந்திரன் சிந்திராங்கியின் படத்தைக் கண்ணுற்று மதிமயங்கி மோகித்துத் தன் புத்திரனுக்குவரித்த பெண் மருமகளென்று எண்ணாமல், தானே மனைவியாக அடைய விரும்பி, அவளைத்தான் அணைய வேண்டுமென்ற துராசை கொண்டு, தன் வாளைத் தூதுவரிடமளித்து வஞ்சகமாய் சித்தராங்கியை வாளுக்கு மாலையிடச் செய்து அழைத்துக் கொண்டு வாருங்களென்று கட்டளை யிட்டான். அவர்களும் அவ்விதமாகவே சென்று கபடமாய் காரியத்தை முடித்துச் சித்திராங்கியையும் தங்கள் நகரத்திற்கு அழைத்து வந்து அரசனிடம் விட்டார்கள். அவ்விடம் வந்த பிறகு நடந்த சூதுகளை யறிந்த சித்திராங்கி, சாரங்கதரனைக் கணவனென

நினைத்துவாளுக்கு மாலை சூட்டிவிட்டுப் பிறகு நரேந்திரனைக் கூட இஷ்டப்படாமல் உயிரைமாய்த்துக் கொண்டாள். தாராவதி! அவளுடைய கற்பின் ஒழுங்கைப் பார்த்தாயா?

தா.—ஆம் தாயே; இந்தக் கதையை இவ்வளவு ஆயாசத்துடன் தாங்கள் இச்சமயத்தில் உரைசெய்த காரணம் யாதோ?

அ.—தாரா! அதன் கருத்து உனக்கு விளங்கவில்லையா? நான் கூறுகிறேன் கேள். சகீ; அவ்வரசன் மருமகளென்றும் நினையாமல் தான் பெண்டாக்கிக்கொள்ள எண்ணங்கொண்டான். அதுபோல் நம் அரசருக்கு மேனகாவின்மீது எவ்வளவு அன்பு இருந்தபோதிலும், பாலிய வயதானதினால் மறுவிவாகம் புரியலாம். அப்படிப்புரிந்தால் இளையாள் மோகத்தில் மேனகாவைக் கைவிட்டாலும் விடலாம். ஆடவரின் புத்தி ஸ்திரமானதன்று. பெண்களைக் கண்டால் எப்படிப்பட்ட கல் நெஞ்சினரும் கரைந்து மதிமாறிவிடுவார்கள். ஆனதால் நீ ஒருக்காலும் மேனகாவைக் கைவிடேனென்று சபதம் கூறினால்தான் என் மனம் மகிழும்.

தா.—என் குணவதியே. நான் சிறுவயதில் தாயை இழந்து தாங்களே தாயென்று நம்பி சந்தோஷித்திருந்தேன். தங்களின் உயிரும் இவ்வளவு பால்யத்தில் போய்விட நான் என்ன துர்பாக்கியம் செய்தேனோ. என் கண்மணியான மேனகாவை நான் ஒருநாளும் கைவிடேன். சத்தியமான வார்த்தை. என்னை நம்பி இவ்வளவும் உரைத்த நீங்கள் இம்மொழியையும் தடையின்றி நம்பிக் கவலையை விடுங்கள்.

அ.—நல்லது. ஆஹா ஆநந்தமடைந்தேன். தாரா! எனக்கு உயிர் போகும் தருவாய் சமீபித்துவிட்டது; நீ சீக்கிரமாய்ச் சென்று என் நாதனை அழைத்துவா. நான் கூறினவைகள் ஒன்றையும் நீ கூறிவிடாதே.

அப்படியேயென்று நமஸ்கரித்து, நான் சென்று அரசனை அழைத்து வருகிறேனென்று வெகு துரிதமாய் நடந்து அரசன் சபையை அணுகி, வணங்கி, நமஸ்கரித்துத் துக்கம் மேலிட்ட முகத்துடன் தலைகுனிந்து நின்றாள். அதைக்கண்ட அரசன் நடு நடுங்கி, தாரா, நீ ஏன் இவ்வளவு வேகமாய் ஓடி

வந்து கவலையுற்ற முகத்துடன் இருக்கிறாய். என்ன சமாசாரம். என் கண்மணியான மதுரா உடம்பு எப்படி இருக்கிறது என்றார்.

தா.—வேந்தே!! பட்டமகிஷி தங்களை சீக்கிரமாக அழைத்துவரும்படி கட்டளையிட்டார். அதற்காகத்தான் நான் வேகமாய் வந்தேன்.

அ.—அப்படியா. இதோ வந்தேனென்றுகூறி சிம்மாசனத்தை விட்டுக் கீழிறங்கி மந்திரியார் புடைசூழ, தாராவதி பின் தொடர, மதுரவேணியின் அந்தப்புரமடைந்து யாவரையும் வெளியில் நிற்கும்படி உத்தரவளித்து தான் மாத்திரம் உட்புகுந்தார். தன் கணவனைக்கண்ட மதுரவேணி, எழுந்திருக்க இயலாமல் படுத்தபடியே நமஸ்கரித்து, நாதா! வரவேண்டுமென்று உபசரிக்கத் தன் மனைவியின் தேகஸ்திதியையும், பரிதாப நிலைமையையும் கண்ணுற்ற அரசன் மனங்கலங்கிக் கண்ணீர் சொரிந்து, என் தங்கமே! மதுரா!! ஏன் உடம்பு மிகவும் மெலிந்து இருக்கிறது? என்னையழைத்த காரணம் யாது என்று கேட்டார்.

ம.—காதலா. என்னுயிர் எமனுலகு நாட இன்னும் சில நிமிடங்கள் தானிருக்கின்றன. அதனால் தங்களைக் காண வேண்டி அழைத்தேன். மேனகாவைக் கைவிடாமல் காப்பது தங்கள் கடமையென்று வெகு கஷ்டத்துடன் மொழிந்து உயிர் துறந்தாள். எதிர்பாராமல் நடந்த சம்பவத்தைக் கண்ட அரசன் மெய்மறந்தவனாகி அடியற்ற மரம்போல் கீழேவிழ்ந்து மூர்ச்சையடைய அச்சப்தத்தைச் செவியுற்ற மந்திரிகளும், தாதிகளும் திடீரெனக் கதவைத்திறந்து உட்புகுந்து அரசியின் மரணத்தையும், வேந்தன் மூர்ச்சையையும் கண்டு மிகவும் பரிதபித்து அரசனுக்கு வேண்டிய சைத்தியோபசாரங்கள் செய்து களை தீர்த்தனர். இவர்களின் உபசரணையினால் அரசன் கண் விழித்துக் களைதீர்ந்தெழுந்து தன் மனைவியின் சவத்தைக் கண்டுக் கண்களிலறைந்து கொண்டு ஆஹா, என் கண்மணியே, என் மனதிற்குகந்த மனையாட்டி! மதுரா!! இனி உன்னை என்று காண்பேன். நீ இவ்வளவு வாலிபத்தில் மரிப்பாயென்று நான்

கனவிலும் கருதவில்லையே. இனி என் செய்குவேன். என் இல்லறதர்மத்திற்கிசைந்தவளாகிய உன்னுடைய ஆவி நீங்கியும், என் பிராணன் போகவில்லையே. இனி யாரை மதுரா!! வென்று அழைப்பேன். உன் மதுர மொழிகளை எவரிடம் கேட்பேன். என் சித்தம் கலங்குதே! என் உடல் பதைக்குதே!! ஆஹா. எனக்கு இனி அரசும் வேண்டாம் உடலும் வேண் டாம். இதோயானும் உன்னுடன், வருகிறேனென்று கூறித் தன் உறைவாளையுருவிக் கையைத் தலைக்கு நேராக உயர்த்தின தும், மந்திரியான மதியூகி சடேரென ஓடி மன்னன் கைக்கட் கத்தைப்பிடுங்கி தூரத்தில் வீசி யெறிந்துவிட்டு, வேந்தர் கோமானே! எங்கள் குலதெய்வமே!! என்னகாரியம்செய்ய எத் தனித்தீர்கள். குடிகளுடைய குறையை நீக்கித் தேறுதல் கூறும் தாங்களே இவ்வளவு அதைரியம் கொண்டால் நாங்கள் பிழைப்பதெப்படி. நம்முடைய காலவசத்தினுலும், ஆயுள் குறையினுலும் அரசிமாண்டனர். விதியை எவரால் வெல்ல முடியும். ஆண்டாண்டு தோறும் அழுது புறண்டாலும் மாண்டார் வருவதுண்டோ? தாயை இழந்து தவிக்கும் தங்கள் செல் வமாகிய மேனகா, தந்தையாகிய நீங்களுமிறந்தால் யாது செய் குவள். அவளை அன்புடன் எவர் ஆதரிப்பார்கள். இவைகளை யெல்லாம் யோஜிக்காமல் ஆத்திரத்தின் கொடுமையினுல் ஆவி யைப் பிரிக்கத்துணிந்துவிட்டீர்களே என்று பலவாறு தேறுதல் மொழிகள் கூற, அரசனும் ஒருவாறு மனந்தேறி, மேனகாவை வாரியெடுத்து, மார்புறத் தழுவி, என் கண்மணியே, செல்வமே, கனியே, செந்தேனே, நீ இன்னும் பால் மணம் மாறாத பாலகி யாய் ஒரு வருத்தமுமறியாமலிருக்கிறுயே. தகுந்த வயது வந்து என் தாய் எங்கே என்று கேட்டால் நான் என்ன பதில் கூறுவேன். என் அருந்தவப் புதல்வியேயென்று மிகவும் ப்ர லாபித்துக் குழவியை தாராவதியிடமளித்து, தாரா. என் அரண்மனை பணிப்பெண்களுள் நீதான் மதியிற்சிறந்தவளென்று என் மதுரவேணியினுல் கேள்விப்பட்டிருக்கிறேன். அதனுல் என் மதலைக்குச் செவிலித்தாயாகவும், தோழியாகவுமிருந்து அவளைக் காப்பது உன் கடமை, என்று கூறித் தன் மகளுக்குத்

தனியாக ஓர் அரண்மனை புதுப்பிக்கும்படி மந்திரியிடம் கட்டளையிட்டு, மதுரவேணிக்குச் செய்யவேண்டிய உத்தரகிரியைகளெல்லாம் வெகு துக்கத்துடன் செய்து முடித்துத் தன்னரண்மனை சென்றான். தாராவதி மதுரவேணியின் கட்டளையைச் சிரசின் மேல் வகித்து மேனகாவைத் தாய்போல் பராமரித்து வெகு அன்புடன் வளர்த்து வந்தாள். அரசனும் **உப்புந்தண்ணீரும் உட்புக உள்ள வர்த்தமெல்லாம் தீரும்** என்றபடி நாளடைவில் துக்கம்மாறி அரசு செலுத்திவருகையில் ஓர் நாள் சபையில் வீற்றிருக்கும் சமயத்தில், மந்திரியான மதியூகி, அரசனை வணங்கி, மன்னாதி மன்னனான எனதாண்டவரே! நான் வெகுநாட்களாய்த் தங்களிடம் ஒரு சமாசாரம் கூறவேண்டி எண்ணினேன். ஆனால் அச்சத்தினால் அச்செய்தி வெளிவரவில்லையென்று மிகவும் தாழ்மையுடன் வணங்கினான்.

அ.—இப்படியா! மதியூகி, நீ அச்சப்படும்படி நான் யாது குற்றஞ் செய்தேன்? என் குடிகளுக்கு ஏதாவது தீங்குநேரிட்டதா? அல்லது பஞ்சம் உண்டாயிற்றா? அல்லது உன்னை எதற்காகவாவது நான் தண்டனை செய்தேனோ?

ம—மகராஜ்! ராஜ, ராஜேஸ்வரனே!! தங்களுடைய செங்கோலின் கீழ் பஞ்சமென்பதும், கஷ்டமென்பதும் உண்டா? என்னை தாங்கள் அதட்டினது கூடக் கிடையாதே!

அ.—ஆனால் நீ அச்சப்பட்ட காரணம் யாதோ?

ம—அரசே! தங்கள் தேவியும், எங்கள் ராணியுமான, மதுரவேணி இறந்து வெகுநாட்களாகியும் தாங்கள் மறு விவாகம் புரியும்படியான ஏற்பாடு ஒன்றும் செய்யவில்லையே.

அ.—அமைச்சா! எனக்கு அவ்வித எண்ணமே கிடையாது. இனி எனக்கு விவாகம் வேண்டாம்.

ம.—மகிபதே! தாங்கள் அவ்வளவு வைராக்கியங் கொள்வதின் காரணம் யாதோ?

அ—மதியூகி! இனி நான் எந்த ராஜகுமாரத்தியை மணம் புரிந்தபோதிலும், எவளும் என் மதுராவுக்குச் சமமாகமாட்டார்கள். அஃதுமன்றி வேறு விவாகம் புரிந்தால் என் மகள் மேனகா அனாதரவாகிவிடுவாள்,

ம.—வேந்தே! தாங்களிம்மாதிரி கூறுவது அதியாச்சரிய மாயிருக்கின்றது.

அ.—யாது காரணத்தினால் உனக்கு அப்படித் தோன்று கிறது?

ம.—தங்கள் மகள் மீதிருக்கும் அன்பு தங்களுக்கு எவ் விதம் மாறும்! தங்களுக்குப் பிற்காலம் தங்கள் செங்கோலைத் தாங்க ஓர் புத்திரசந்ததி வேண்டாமா. மேனகாவோ பெண் குழந்தை.

அ.—மந்திரீ! நீ கூறுவதுயாவும் உண்மைதான். ஆனால் என்னுடைய கருத்துயாதெனில் மேனகாவை ஒரு வாலிபனுக் களித்து, அவனுக்கே முடிசூட்டநினைக்கிறேன். உன்னுடைய விருப்பம் யாதோ?

ம.—தாங்கள் மருமகனுக்குப் பட்டமளிக்கிறேனென்பது எனக்கு வியப்பாயிருக்கின்றது. நம்முடைய குலவிருத்திக்குப் புத்திர சந்ததி வேண்டாமா? மேலும் இந்தப் பாலியவயதில் மனைவியின்றி தாங்கள் காலங்கழிப்பது சரியாகத்தோன்ற வில்லை. என்று பலவாறு உரையேத்தக் **கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்** என்றபடி அரசனும் மனமிளகி எனக்குத் தகுந்த ராஜபுத்திரிகள் எந்த தேசத்தில் இருக்கிறாள்? யார் விசாரிப்பார்கள்? என்று கேட்டான்.

ம.—வேந்தர் கோமானே! என் ஜன்மம் சாபல்யமாயிற்று. நம் தேயத்திற்கடுத்த **புஷ்பாபுரி**யை யரசாளும் **போஜ**னென்னு மரசனுக்குப் **புஷ்பாவதி** யென்னுமோர் குமாரத்தியும், **புஜங்க தேவ**னென்னுமோர் குமாரனுமிருக்கிறார்கள். அந்தப்பெண்ணே தங்களுக்குத் தகுந்தவள்.

அ.—அப்படியா? நல்லது, அந்தப் பெண்ணின் ரூபலா வண்யம், குணம், இவைகளை நன்றாய் அறிந்து வரவேணடும். அந்தக்காரியத்தில் நீதான் நிபுணன். ஆனதால் நீயே நேரில் சென்று விஜாரித்துவா.

ம.—நல்லது மகராஜ்! தடையின்றி நாளையதினம் நானே சென்று வருகிறேன். தாங்கள்கொண்ட எண்ணத்தை மாற்ற வேண்டாம். நேரமாகிவிட்டது, சபையைக் கலைத்து விடுகிறே

னென்று கூறித் தன் தொழிலைச் செய்ய எழுந்ததும் அரசனும் எழுந்து அந்தப்புரம் சென்றான். மதியூகியும் சபையைக் கலைத்துத் தன்னிருப்பிடம் சேர்ந்தான்.

இது இவ்வாறு நிற்கச் சற்று நம் கதா நாயகியான மேனகாவைக் கவனிப்போம். அரசன் தன் புத்திரிக்குத் தனிமையாக ஓர் அரண்மனை புதுப்பித்துக் கொடுத்தாரென்று முன்னமேயே கூறினோம். அவ்வரண்மனையின் பின் புறத்தில் தன் மகள் யாதொரு கவலையுமின்றி விளையாடுவதற்காக ஓர் பெரிய நந்தவனம் அமைத்து அதில் மல்லிகை, முல்லை, இருவாக்ஷி, சண்பகம், மரு, தவனம், அலரி, பாதிரி, சுரபுன்னை, பாரிஜாதம், வகுளம், மனோரஞ்சிதம், கொங்கு, மந்தாரை, கொடிசம்பங்கி, நிலசம்பங்கி, சூரியகாந்தி, மகிழ், குடமல்லி, வாடாமல்லிகை, ரோஜா முதலிய மணம் நிறைந்த மலர்ச் செடிகளும், அநேகவிதமான பல நிறங்களமைந்த க்ரோட்டன்சுகள், எழுத்துக்கள் போலவும், மிருகங்களைப் போலவும் தரையில் படரவிட்டு வெகு விநோதமாகவும், அலங்காரமாகவும், மா, பலா, கொய்யா, கிச்சலி, தென்னை, கமுகு, வாழை, ஆப்பில், அனாஸ், முந்திரி, முதலிய பழந் தரும், தருக்களும் அநேக வேலையாட்களைக் கொண்டு நீர் பாய்ச்சிச் செழிப்பாய் வளர்த்திருந்தான். அதுவுமன்றி இருபெரிய விருக்ஷங்களினிடையில் வஜ்ர, வைடூரிய, கோமேதக, மரகத, நீல, புட்பராகபச்சை முதலிய நவரத்தினக் கற்களினாலிழைக்கப்பட்டுப் பார்ப்பவர் கண்களைக் கவரும்படி, பத்தரை மாற்றுப் பசும் பொன்னாலாகிய ஊஞ்சல் மாட்டி, அதன் மீது பொற்சரிகைப் பட்டினால் தைத்த மெத்தையிட்டு வெகு அலங்காரமாகவும், சிங்காரமாகவும், அமைத்திருந்தான். தனக்கு அருமை மகளானதினால் உபாத்தியாயரைக் கொண்டு சகலகலைகளையும் கற்பிக்கச் செய்ய, யானை யேற்றம், குதிரை யேற்றம், வில், வாள், ஈட்டிமுதலிய ஆயுதப்பயிற்சிகளும் இன்னும் அநேக, ஆடவர்க்குரிய அப்பியாசங்கள்யாவும் பழக்கி வைத்து, அநேக தாதிமார்களையும் அமைத்து யாதொரு குறைவுமின்றி மிகவும் மேன்மையாய் வளர்த்து வந்தான். மேனகாவும், தாராவதியும், உடலிரண்டும், உயிரொன்றுமாய்.

மிகவும் அந்நியோந்நியமாய் இணைபிரியா நேசிகளாயிருந்தனர். ஓர் தினம் மாலை நேசிகளிருவரும் நந்தவனம் சென்று மலர்கள் கொய்து, வேடிக்கையாய் அங்குள்ள மான், மயில், குயில், மடவன்னம், கிள்ளை, முதலிய பழக்கமான புட்களுடன் விளையாடிக் களைத்துப்போய் அங்கு அமைத்திருந்த ஊஞ்சலின் மீது வந்தமர்ந்து உல்லாசமாய் ஆடிக்கொண்டிருக்கும் சமயத்தில் மேனகா, தாராவதியை நோக்கி என் தோழியே! எனக்கு அன்னையில்லையென்று கூறினையே. நான் மனிதர்களுக்குப் பிதாவும், உன்னைப் போன்ற தோழிகளும் தான் பக்கத்திலிருப்பார்களென்றும், தாய் வேறு எங்கேயாவது இருப்பாள் என்றும் என்னுடைய மூடமதியினுல் முன்பெல்லாம் நினைத்தேன். இப்பொழுது சில காலமாய் நான் உன்னைக் கேட்டதில் என் அன்னை வேறு நகரத்திலிருப்பதாகவும், அதைப்பற்றி என் பிதாவைக் கேட்கவேண்டாமென்றும் கூறினுய். நேற்று ஏதோ அவசியமான பேச்சில் உன் தாயிறந்து விட்டாளென்று மொழிந்தாய். நீ எந்தக் காரணத்தினுலோ என்னிடம் கூறுவதற்குப் பயப்படுகிருய். தயவு செய்து உண்மையைக் கூறுவாய்! என் சகியே!! யென்று மனங் கசிந்தாள்.

தா.—இளவரசியே! உன்னிடம் தாயில்லையென்று கூறினுல் நீ மனங்கலங்குவாயே, தக்க வயது வந்து தெரிவிக்கலாமென்று நான் மறைத்து வந்தேன். உன் தாயிறக்கும்பொழுது நீ மிகவும் சிறியவளாயிருந்ததனுல் உனக்குத் தாயிறந்த விஷயம் ஞாபகமில்லை.

மே.—ஆஹா! அப்படியா!! நான் அம்மாவென்று அழைக்கும்படியான பாக்கியம் செய்யவில்லையே!!! நான், பாவி, பிறந்திராவிடில் என் தாய் சுகமாய் இருந்திருப்பாள். என் துரதிருஷ்டம் அவளிறந்துவிட்டாளேயென்று கூறிப்ரலாபித்து மான் விழியையொத்த தன் நேத்திரத்தில் நல்முத்துப்போன்ற கண்ணீர்த் துளிகளைச் சோர்விட்டாள். உடனே தாரா, தன் மேகலையின் முந்தாணையினுல் மேனகாவின் கண்களைத் துடைத்து, ஸகியே! மேனகா!! நீ என்ன, அறிவிலிபோல் கண் கலங்குகிருய். அதற்காகத்தான் நான் உன்னிடம் கூறுமலிருந்தேன். நாமென்ன

செய்யலாம். எல்லாம் வல்ல இறைவன் செயலன்றோ இது. நீ இதுநாறும் இவ்வளவு சஞ்சலப்பட்டது கிடையாதே. இன்று யாது காரணமாய் தாயின் விஷயமறிய ஆவல்கொண்டாயென்றாள்.

மே.—ப்ரியே, வர்த்தமொன்றுமில்லை. யாவும் நம் அதிருஷ்டப்படிதான் நடக்கும். அதில் சந்தேகமில்லை. இருந்தபோதிலும் நாம் நரஜன்மமாயிருந்து, ஸம்ஸாரம் என்னும் ஸாகரத்தை யடையவேண்டியிருப்பதால், ரோஸம், பொறுமை முதலிய காரணங்கள் நம்மை யணுகுகின்றன. இன்று நான் கேள்விப்பட்டதில் என் தந்தை மறு விவாகம் புரியப்போவதாய் தெரியவந்தது. அது உண்மைதானா ?

தா.—ஆம். நானும் கேள்விப்பட்டேன், உண்மையன்றி பொய் வார்த்தை பிறக்குமா, இந்த விஷயங்களில்..... .... ....

மே.—தாரா, நான் சில நாளைக்கு முன் ஒரு டிராமா புஸ்தகம் படித்தேன். அதை நினைக்கும்பொழுதே எனக்கு மயிர் கூச்சலடைகின்றது. பயமாயிருக்கிறது.

தா.—அப்படியா, அப்புத்தகத்தில் அப்படிப் பயங்கரமான விஷயம் யாதும் உளதோ ? அதனால் உனக்கு நேரிட்ட இடையூறுகள் யாது ?

மே.—ப்ரியே ! அப்புத்தகத்தில் ஞானசௌந்தரி யென்னும் மாது தன்னுடைய சிற்றன்னையினால் மிகவும் வாதைப்படுகின்றாள். அவளைப்போல் எனக்கும் அவ்விதமான கஷ்டங்கள் சம்பவிக்குமோவென்று அஞ்சுகிறேன்.

தா.—மேனகா ! நீ ஏது இவ்வளவு கோழைத்தன மடைந்தாய். எது நேரிட்டாலும் நம் அச்சத்தினால் விட்டுப்போகுமா ? எதுவும் வினையின்படிதான் நடக்கும். எதற்கும் கடவுள் ஒருவர் இருக்கின்றார். நீ யாதொன்றுக்கும் கவலைப்படவேண்டாம் இருள் வர, வர, அதிகரிக்கின்றது. செல்வோம் எழுந்திருவென, இருவரும் ஊஞ்சலை விட்டு எழுந்திருந்து தங்களரண்மனை அந்தப்புரம் சென்றார்கள்.

---

## 2-ம் அத்தியாயம்.

மணமுடிக்க யத்தனித்த மந்திரியான மதியூகி, ஒரு தூதுவனைப் புஷ்பாபுரிக்குத் தன் வரவைத் தெரிவிக்கும்படி அனுப்பி விட்டுத் தானும், சேனாவீரர்கள் புடைசூழ, தங்கத்தட்டு நிறைய மாணிக்கக் கற்களைப் போஜராஜனுக்குப் பாத காணிக்கையாக எடுத்துக்கொண்டு ரதாரூடராய், புஷ்பாபுரிக்குப் பிரயாணமாகிக் காடு, மலை, நதிகள், மற்றுமுள்ள சிறு கிராமங்கள் யாவற்றையும் கடந்து புஷ்பாபுரியை யணுக, புஷ்பாபுரியின் மந்திரிமார்களும், ப்ரஜைகளும் மதியூகியை வெகு சந்துஷ்டியுடன் வரவேற்றனர். மந்திரிமார்கள் மதியூகியைக் கைலாகு கொடுத்து, வணங்கி, செய்யவேண்டிய மரியாதைகள் செய்து, அரசனின் சபையில் அழைத்துச் சென்றனர். அரசனும் மதியூகியைக் கண்டு எழுந்திருந்து நல்வரவு கூறித் தன் சிம்மாசனத்தினருகில் ஆசனம் அமர்த்தி, மந்திரி! தங்கள் அரசனின் க்ஷேமமும், மற்ற குடிப்ரஜைகளின் க்ஷேமமும், தங்கள் நாட்டில் எப்படி இருக்கின்றனவென்று வினவ.

ம—மகராஜ்! யாவரும் ஈசனினருளால் சௌக்கியமே. மாதமும்மாரி பெய்து யாதொரு குறைவுமின்றி செழிப்பாயிருக்கின்றது.

அ.—மிகவும் ஆநந்தம். தாங்கள் என்னைப் பொருட்படுத்தி இவ்வளவு தூரம் வந்த காரணம் யாதோ? தெரியவில்லையே.

ம.—எங்களரசன் பட்டமகிஷி இறந்துவிட்டதனால் தங்கள் குமாரத்தியின் ரூபலாவண்யத்தையும் நற்குண நற்செய்கைகளையும் தூதுவராலறிந்து அவளையே மறுதாரமாக அடைய விரும்பி என்னை அனுப்புவித்தார்.

அ.—அப்படியா! வெகு சந்தோஷம். மகாநந்த மகாராஜனுக்கு என் புத்திரியை யளிப்பதில் யாதொரு தடையுமில்லை. ஆனால் என் புத்திரியின் விருப்பத்தையுமறிந்து நாளையதினம் முடிவுசெய்வோம். போஜனம்செய்ய எழுந்திருங்களென்று கூறி மந்திரியை அழைத்துச் சென்று விருந்தளித்து, சந்தன,

புஷ்ப, தாம்பூலாதிகள் வழங்கித் தனிமையாக ஏற்பட்டுள்ள விடுதியைக் காண்பித்து அங்கு சயனிக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்யச்சொல்லி வேலையாட்களுக்குக் கட்டளையிட்டு, சேனை களுக்கெல்லாம் ஆகாரமளிக்கும்படி உத்தரவிட்டுத் தன் அந்தப் புரம் சேர்ந்து தன் மனைவியை அழைத்துச் சங்கதிகளையெல் லாம் கூறித் தன் புத்திரி புஷ்பாவதியை அழைத்தான். உடனே புஷ்பாவதி தன் தந்தையின் இருப்பிடம் வந்து தாய், தந்தையரை வணங்கி, பிதாவே, என்னை இவ்வேளையில் வர வழைத்த விவரம் யாதோ? என்று வினவினாள்.

அ.—என் கண்மணி! புஷ்பா! மோகினிபுரியை அரசாளும் சக்ரவர்த்தியான மகாநந்த மகாராஜன் உன்னை மணம்புரிய ஆவல்கொண்டு தன் மந்திரியை விசாரித்து வரும்படி அனுப்பி யிருக்கிறார். ஆனால் இரண்டாந் தாரம். உன் விருப்பம் யாதோ?

பு—தந்தாய், அவருக்கு மூத்த தாரம் ஒருத்தி யிருக் காளோ?

அ.—இல்லையம்மா, அவள் இறந்துவிட்டனள். உனக்கு விருப்பமில்லாவிடில் பலவந்தம் செய்யவில்லை.

பு.—அப்படியா! தங்கள் மனதிற்குத் தகுந்த வரனாயிருந் தால் எனக்குச் சம்மதமே. தாங்கள் என் விஷயத்தில் கெடு தல் செய்வீர்களா? உங்களிஷ்டப்படியே நடக்கின்றேன்.

அ.—வெகு சந்தோஷம்! குழந்தாய். எல்லா அரசருக்கும் சக்ரவர்த்தி அவர்தான். உன்னுடைய அதிர்ஷ்ட வசம் தான் அவர் உன்னைக் கோரினர். நான் நாளையதினம் நிச்சயம்செய்து விடுகிறேன். புஷ்பாவதி, நீ சென்று வருவாயென, புஷ்பாவும் நமஸ்கரித்துத் தாய், தந்தையரிடம் உத்தரவுபெற்றுத் தன் னிருப்பிடம் சென்றனள். அரசனும் தன் பள்ளியறை சேர்ந்து சயனித்தான். மறுதினம் காலை அரசன், மதியூகி யாவரு மெழுந்து காலைக்கடன்களை முடித்து, போஜனம் செய்து, தாம் பூல மருந்திச் சபையில் வந்தமர்ந்து, உரையாடத் தொடங்கினர்.

அ—மந்திரி; என் புத்திரியும் சம்மதித்துவிட்டாள். இனி முகூர்த்தம்வைத்து விவாகம்செய்ய யாதொரு தடையுமில்லை.

ம.—வேந்தே, என் களிப்பை யாதென்று கூறுவேன்.

தாங்கள் இவ்விடத்திலேயே முகூர்த்தம் வைத்து நாள் குறிப்பிட்டுக் கொடுத்துவிட்டால் சீக்கிரத்தில் விவாகம் முடித்துவிடலாம். யாதொரு தடையுமில்லை.

அ.—அப்படியே செய்கிறேன். அடே சேவகா! அரண்மனை சாஸ்திரிகளை அரைநொடியிலிங்கு அழைத்து வா.

சே.—இதோ சென்று வருகிறேன் மகராஜ், என்று வணங்கிவிட்டு ஓடோடியும் சென்று ராஜவீதிகளையெல்லாம் கடந்து ஓர் முடுக்கில் நுழைந்து அங்குள்ள ஒரு சிறிய வீட்டின் வாயிலில் வந்து நின்றான். அவ்வீட்டு வாசல் திண்ணையின் மீது பேயோ, பிசாசோ அல்லது பீமனோ, பகாசூரனோ என்று பார்த்தோர் பிரமிக்கும்படியான கரியமேனியும் திடகாத்திரமும் கந்தல் வஸ்திரதாரியுமான ஒரு மனிதர் கும்பகர்ணனுக்கு வகாலத்து அனுப்பி ஆழ்ந்த நித்திரையிலாழ்ந்து உறங்கிக்கொண்டிருந்தார். அவர் விடும் குறட்டை இடிமுழக்கம்போல் சேவகன் காதைத் துளைத்தது. சேவகன் அந்த ஐயரைப் பார்த்து சிரித்துக்கொண்டு, ஓய் சாஸ்திரிவாளே! ஓய் சாஸ்திரிவாளே!! என்று இருமுறை உரத்துக் கூவினன். இவன் வாள், வாள் என்று கத்தினது தொண்டைக்கு வலி ஏற்பட்டதே தவிர சாஸ்திரி எழுந்திருக்கும் வழியில்லை. சேவகனுக்குக் கோபம் ஜனித்து மறுபடி உரத்த சப்தமாகக் கூவினன். அது லேசாய் சாஸ்திரிவாளின் செவியில் நுழைய, யாரடா அது! என்று கண்டோர் நடுங்கும்படியான தன் குரலை வெளிப்படுத்தி எழுந்து உட்கார்ந்து கேட்டார்.

சே.—நல்ல ஐயர் தான் நீர்; நித்திரையில் உனக்குச் சமதையானவர் உலகிலெவருமில்லை, உம்மை அரசன் அழைத்து வரும்படி கட்டளையிட்டார்.

ஐ.—என்னடா, விசேஷம்.

சே.—அதெல்லாம் எனக்குத் தெரியவராது. சீக்கிரமாக வாருமென்று கூறித் தான் அரண்மனை சென்றுவிட்டான். ஐயர் ப்ராமணார்த்தம் சாப்பிட்ட தன் தொந்தியைத் தடவி கையில் தாங்கிக்கொண்டு எழுந்து அடுத்த வீட்டில் வம்புவளக்க

போயிருந்த தன் அன்புள்ள மனையாட்டி மங்களத்தை தன் வீட்டிற்கு வரும்படியாக அழைத்தார்.

ம.—வாசலில் வந்துகொண்டே என்ன எழவு; எப்பபார்த்தாலும் கூட்டா எவள் வீட்டுவேலே சேவ; இந்தக் கட்டேலே போவானுக்கு வாக்கப்பட்டு வேலே சேசுக்குண்டே இருக்கணும். எதுக்குக் கூட்டக, என்று சரமாரியாய் மொழிந்து கொண்டேவந்தாள். (இவள் வருவது அடுத்த வீட்டிலிருந்து. வேலே செய்கிறாளாம்!!).

சா.—என்னடீ ஈ ஈ. என் தாயே, மங்களம், நல்ல சங்கதி சொல்ல கூப்படரேன்; கத்தரயே; நமக்கு நல்லவரும்படி வரப் போரது இப்ப.

ம.—ஆமா, வரும்படி. வந்து என்னைத்தான் காப்பாத்தரக; என்ன தாசில்வேலே வந்திருக்கு, வரும்பிடிக்கி.

சா.—அடியே, ஏய், அரமனைச் சேவுகன் வந்து கூட்டாண்டி; சுருக்கப் போகனுண்டீ; என் பொடிமட்டையை எடுத்துண்டு வாடி; ஒரு சிட்டிகை போடனுண்டீ.

ம.—அட சனியனே; பொடிமட்டையை யாருகண்டா, மொளகாப் பொடிதானி யிருக்கு, அள்ளி அள்ளி உரிஞ்சுங்க, என்னால் ஒன்னும் எடுத்துக் குடுக்க முடியாது, என்று கூறி மறுபடி அடுத்த வீட்டிற்கே சென்றுவிட்டாள். இவ்வளவு மரியாதைகளையும் பெற்றுக்கொண்ட சாஸ்திரிவாள், போடி, தடிமுண்டை, நோக்கு அடுத்தாத்து ஆவடையனோடு பேசத்தான் தெரியும், என்று இன்னம் ஏதோ முணமுணத்துக் கொண்டு தன் வீட்டிற்குள் வந்து, பர, பரப்பாய் விபூதியை யள்ளி பட்டை, பட்டையாக பூசிக்கொண்டு கந்தலே அவிழ்த்து விட்டு சுமார் 20 வருஷங்களுக்கு முன் அவர் சாந்திக் கல்யாண காலத்தில் வாங்கின உயர்த்தியான ஒத்தைகம்பி வேஷ்டியை உடுத்திக்கொண்டு, ஒரு சால்வையை எடுத்து சுமார் ஒரு பெரிய பரங்கிக்காயளவு முண்டாசு கட்டித் தலேயில் வைத்துக்கொண்டு, மற்றொரு சால்வையை மேலே போர்த்திக்கொண்டுக் குண்டாந்தடியைக் கையில் பிடித்து, மிதியடிக் கட்டையைக் காலில் மாட்டிக் கலியாண மாப்பிள்ளேபோல் முறுக்காக, வெகு வேக

மாக அரண்மனையை நாடி, இவர் வரவை எதிர்பார்த்திருந்த அரசன் சபைக்குச் சென்று, ராஜ! ராஜேஸ்வரா!! தீர்க்காயுஷ்மான்பவ!!! என்று ஆசிர்வாதம்செய்து நின்றூர். ஓடிவந்த இளைப்புமாற சாஸ்திரிகளுக்கு ஒரு மணிகாலம் செல்ல, அரசனுமெழுந்து வணங்கி, சாஸ்திரிவாள், ஏன் இவ்வளவு காலஹரணம் செய்தீரென்று கேட்டார்.

சா.—இல்லையே மகாராஜா! சுருக்கத்தான் வந்தேன்; நாழியாச்சு; என்னை நீங்க வரவழச்சது என்னவோ?

அ.—ஐயர்வாள், என் புத்திரி புஷ்பாவதியை மோகினிபுரியை அரசாளும் மகாநந்த மகாராஜனுக்கு மணம் புரிவிக்க நிச்சயம் செய்திருக்கின்றோம். நல்ல தினமாக ஒரு முகூர்த்தம் பார்த்துக் கூறவேண்டும்.

சா.—ஆஹா. அப்படியா, நம்பகொழந்தைக்கா. ரொம்ப சந்தோஷம். நல்ல நாளாய் பாக்கரேனென்று கூறி ஒரு நாழிகை பரியந்தம் ஏதோ முணமுணத்து விரல்களை ஒவ்வொன்றாய் விட்டு விட்டு எண்ணிப் பிறகு தலையை நிமிர்ந்து வேந்தே! அடுத்த, வரப்போர, வியாழக்கெழமைக்கு அடுத்த நாள் வெள்ளிக்கெழமை கார்த்தாலே பத்து மணிக்கிக் கடக லக்கனத்திலே மூர்த்தம் நன்னாப் பொருந்திருக்கு. அது தான் சரி. என்றூர். அரசனும் நல்லதென்று கூறி மணவோலை எழுதச்செய்து மதியூகியிட மளித்து, ஐயருக்கு ஒரு ஜோடி சால்வைகளும் ஐந்து டாலர்களும் சன்மானம்செய்ய ஐயர் தலைகால் தெரியாமல் ரொம்ப சந்தோஷ மடைந்து வீட்டிற்குச் சென்றூர். மதியூகி, தன் னகருக்குச் செல்ல அரசனை விடைகேட்க, போஜனும் மனமகிழ்ந்து மந்திரி தங்களரசனிடம் சென்று விவாக விஷயத்தைக் கூறிப் புதன்கிழமை யன்றே யாவரும் இங்கு வந்து சேருங்களென்று மிகவும் பணிவுடன் மொழிந்து தன் மந்திரிமார்களுடனெழுந்து மதியூகியை வழியனுப்பிவிட்டுத் தன்னுசனத்தில் வந்தமர்ந்தான். மதியூகி தன் சேனுவீரர்கள் புடைசூழத் தன் ராஜ்ஜியத்தை அணுகிப் பட்டாளங்களை அவரவர்கள் இருப்பிடம் செல்ல அனுமதி ஈந்து தான் மணப் பத்திரிகையுடன் வெகு சந்தோஷமாய் அரசனிடம் சென்று வணங்கி நின்றுன்.

அ.—என்ன அமைச்ச ! போனகாரியம் ஜயமா ?

ம.—ப்ரபுவே. தங்களைக் கோரிப்போகும் காரியங்கள் எங்கேயாவது தடைபடுவதுண்டா.

அ—போஜன் யாது விடையளித்தார்.

ம.—தங்களுக்குத் தன் கன்னிகையை அளிக்க யாதொரு இடையூறுமில்லை என்று கூறி மணவோலையும் கொடுத்துவிட்டார்.

அ.—மதியூகி, ரொம்ப ஆநந்தம். என்றைய தினம் முகூர்த்தம் வைத்தார். நீயே வாசித்துக் காண்பிப்பாய்.

ம.—வேந்தே, வருகிற வெள்ளிக்கிழமை யன்று காலை 10 மணிக்கு முகூர்த்தம். தங்களைப் பரிவாரங்களுடன் புதன்கிழமை யன்றே, புஷ்பாபுரி வந்துசேரும்படி விக்யாபனம் செய்யச் சொன்னார்.

அ.—ரொம்ப சரி. மதியூகி யென்னும் நாமம், உனக்கே தகும். உன்னாலல்லவோ நான் நீதி வழுவாமல் அரசாண்டு வருகிறேன். உன் மதி மிகவும் சிறந்தது.

ம.—மகராஜ், தாங்கள் என்னை இப்படிப் புகழ்வது தகாது.

அ.—மந்திரீ. நீ தற்புகழ்ச்சியுடைய தருதலை யல்ல, அது எனக்குத் தெரியவரும். நல்லது. என் குழந்தை மேனகாவைச் சற்றுநேரம் இங்கு வந்து போகும்படி கூறுவாய். நீ சென்று வா.

ம.—ஆஹா, இதோ, அழைக்கிறேன், என்று கூறி வெளியில் சென்று, சேவகனிடம் இளவரசியை, அழைத்துவரக் கட்டளையிட்டுத் தன்னிருப்பிடம் சேர்ந்தார். சேவகன் ஓடோடியும் இளவரசியினரண்மனை சென்று மேனகாவுக்கும், தாராவதிக்கும் வந்தனம் செய்து நின்றான். அவனைக் கண்ணுற்ற தாராவதி, சேவகா, யாது காரணமாயிவ்விடம் வந்தாயென்று வினவ.

சே.—அம்மணி, இளவரசியை அழைத்து வரும்படி அரசன் கட்டளையிட்டார்.

மே.—இதோ வருகிறேனென்று கூறிச் சேவகனை அனுப்பிவிட்டுத் தாராவதியுடன் தந்தையிருப்பிடம் சென்று, பிதா ! நமஸ்காரம் என்று மொழிந்தாள்,

அ.—வா, அம்மா, மேனகா. இதோ என் பக்கலில் உட்கார் என்று உரைத்து என் கண்மணியே, உன்னை ஒரு காரிய நிமித்த மாக வரவழைத்தேன்.

மே.—தந்தாய், அப்படி என்ன காரணம்?

அ.—மேனகா, உன் தாயிறந்து வெகு நாட்களாகிவிட்டன. நான் மணம்புரிய சம்மதமில்லாமலிருந்தேன். இப்பொழுது நம் மந்திரி, மதியூகி என்னை வற்புறுத்திப் புஷ்பாபுரியின் ராஜ குமாரத்தியை நிச்சயம்செய்து வந்திருக்கிறான் உன்னுடைய விருப்பத்தை அறியுமாறு இங்கு அழைத்தேன்.

மே.—அப்பா எனக்கு ஆநந்த மேலீட்டினால் இன்னது பேசுவதென்றே தெரியவில்லை. தாங்கள் மணம்புரிந்தால் எனக்குச் சிற்றன்னையல்லவோ அம்மாது. எனக்குத் தாய் வருவாளென்னும் பாக்கியமிருந்தால் எனக்குக் களிப்பில்லையா! என்றைய தினம் விவாகம்.

அ. குழந்தாய், நாம் நாளையதினம் புஷ்பாபுரிக்குப் பிர யாணப்படவேண்டும். தயாராக இருப்பாய்.

மே.—அப்படியே. நான் சென்றுவருகிறேனென்று கூறி தாராவுடன் கூடித் தனதில்லம் சேர்ந்தனள்.

புஷ்பாபுரியிலெங்கு பார்த்தாலும் பந்தல்கள் போட்டுத் தோரணங்கள் நாட்டி, அலங்காரமாகப் புஷ்பங்களைச் சிங்கா ரித்துப் பன்னீர், சந்தனம் முதலிய வாசனை நிறைந்த வஸ்துக் களை, பூமி முழுவதும் தெளித்து மணம் கமழ்ந்துகொண்டிருக்க மாப்பிள்ளையான மகாநந்தனின் வரவை எதிர்பார்த்திருந்தனர். இவர்களும், ஜயபேரிகைகள் முழங்க, மங்கள வாத்தியங்கள் அண்டம் செவிடுபடும்படி கோஷிக்க, ரத, கஜ, துரக பதாதி களுடன் மோகினிபுரியிலிருந்து கிளம்பி, புஷ்பாபுரியை யணுக, போஜராஜன் யாவரையும், மங்களகரமாய் வரவேற்று, உப சரித்து, அவரவர்களுக்குத் தகுந்த விடுதியமைத்து, மரியாதை கள் யாவும் குறைவற நடத்தினான். வெள்ளிக்கிழமை யன்றைய தினம் விவாக மகோற்சவம் வெகு சிறப்புடன் நடந்தேறியது. பிறகு யாவரும் ஒரு மண்டலகால பரியந்தம், வெகு சந்துஷ்டியுடன் விருந்து, ஆடல், பாடல் முதலிய ஆடம்பரங்களை யெல்லாமனு

பவித்துத் தங்கள் தங்கள் நகரங்கள் சேர்ந்தனர். மகாநந்தனும், இளைய மனைவியான புஷ்பாவதியுடனும், மகள் மேனகாவுடனும் போஜனிடம் விடை பெற்று, அவனளித்த ஸ்ரீதன, யானை குதிரை, காலாட்படைகள் புடைசூழ, ரதத்திலேறி மோகினி புரி வந்து சேர்ந்தனர். புஷ்பாவதி மேனகாவை அவள் ரூப லாவண்யத்திற்கும், புத்திநுட்பத்திற்கும் மெச்சி, மேனகாவை எப்படியாவது தன் சகோதரனை புஜங்கனுக்கு, விவாகம் செய்துவிட வேண்டுமென்று எண்ணி, மிகவும் மேன்மையாய், அன்புடன் ஆதரித்து வந்தாள். புஜங்கனோ மிகவும் துஷ்டன். அவனிடம் கள்குடி, கவறாடல், பரஸ்திரீ கமனம் யாவும் நிறைந்திருந்தன. இவைகளையெல்லாம் ஜாடையாயறிந்த, மேனகா, அவனை மிகவும் வெறுத்துக் கனவிலும் கருதாமலிருந்தாள். இப்படிக் கொஞ்சகாலம் சென்றதும் புஷ்பாவதி தனதபிப்பிராயத்தை மேனகாவிடம் தெரிவித்துப் பூர்த்தி செய்ய நினைத்து ஒரு தினம் மாலை மேனகாவின் இருப்பிடம் நாடிச்சென்றனள். சிற்றன்னையைக் கண்ட மேனகா எழுந்து வணங்கி, ஸோபாவின் மீதமரச்செய்து, அன்னாய், தாங்களிச் சமயத்தில் என்னை நாடி வந்ததை நோக்க ஏதோ விசேஷ முளதுபோல் தோன்றுகிறதே யென்று பகர்ந்தாள்.

பு.—என் கண்மணியே! மேனகா!! விசேஷ மொன்றுமில்லை. ஏன் நிற்கின்றாய். என்னருகில் உட்காருவாய். நீ நிற்பதைக்காண, என் கால்கள் நோவுகின்றன. வா. அம்மா. உட்கார். தாராவதி எங்கு சென்றனள். காணோமே.

மே.—தாயே அவளெங்கேயோ, வெளியில் சென்றனள். எனக்குத் தெரியாது.

பு.—அப்படியா. வெகுசந்தோஷம், பயமின்றி உரையாடலாம். என் அன்பே. மேனகா. நீ எப்பொழுதாகிலும் உன் மாமனும், என் சகோதரனுமான புஜங்கனைக் கண்டதுண்டோ?

மே.—ஆஹா. என் மாமனை நான் பார்த்ததில்லையோ. போனமாதம் வந்திருந்தபொழுது கூட, என்னிடம் க்ஷேமம் விஜாரித்தார்.

பு—சரிதான் அவனுடைய அழகும், மதியும், வீரத்தன்மையும் எப்படிப்பட்டது.

மே.—(அவனெவ்வளவு துஷ்டனும், குரூபியுமானாலும், அவன் சகோதரியிடம் கூறுவது தகாதெனநினைத்து) ஆஹா. அதற்கென்னதடை. அவரைப்போன்ற பராக்கிரமசாலி இவ்வுலகிலெவருமில்லை. நான் பார்த்ததுமில்லை. தாயே.

பு.—ரொம்ப சரியான விஷயம். உனக்கே எல்லாம் தெரிந்திருக்கிறது. ஆதலால் நான் கூறவேண்டியது அனுவசியம். உன்னிடம் முக்கியமான சங்கதி ஒன்று சொல்லவேண்டும்.

மே.—என்ன சங்கதியோ?

பு.—நீ என் ப்ராதாவான புஜங்கனை மணம் புரியவேண்டும்.

மே.—(மௌனம்)

பு.—மேனகா. என்ன மௌனம் சாதிக்கின்றாய். உன் தாயாகிய என்னிடம் நீ நாணவேண்டாம். அச்சமின்றி கூறு, அன்னமே.

மே.—எனக்கு என்ன தெரியும். என் தந்தையைக் கேட்கவேண்டும்.

பு—தந்தையின் இஷ்டமிருக்கட்டும். உன்னுடைய விருப்பத்தைத் தெரிவிப்பாய். என் தேனே!

மே—என்னிடம் இனி இந்த விஷயமாய் பேசவேண்டாமென்று தங்களை மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பு.—கோபம் ஜனித்து, அப்படியா, நல்லது. நான் போய் வருகிறேனென்று கூறிச் சென்றுவிட்டாள். இவ்விடம் ஒரு முக்கியமான சமாசாரம் நம் நேயர்களுக்குக கூற வேண்டும். அதாவது மேனகாவின் அறையில் ஓர் பெரிய அலமாரி உண்டு. அதற்குள் ஒரு ஆள் தாராளமாக நின்று வெளியில் நடக்கும் சமாசாரங்களை அறியலாம். மேனகாவினறையில் எவர் வந்த போதிலும், சந்தோஷ சங்கதிகளானாலும் சரி, சங்கட சங்கதிகளானாலும் சரி, தாராவதி சரியான பாதுகாப்புடன் அலமாரிக்குள் நிற்பது வழக்கம். அன்றைய தினமும் அதே மாதிரி நின்றுகொண்டிருந்து புஷ்பாவதி வெளியில் சென்றதும் அலமாரிக் கதவுகளைத் திறந்துகொண்டு மேனகாவைப் பார்த்து

சிரித்துக் கொண்டே வந்தாள். அவளைக் கண்ட கதாநாயகி, தாராவதி, யாவற்றையு மறிந்துகொண்டாயா. **வர, வர மாமி கழுதை போலானுள்** என்று இருக்கிறது. சமாசாரங்கள். இதற்காகத்தான் இவள் என்னிடம் அன்புடனிருப்பது போல் பாசாங்கு செய்கிறுள் போல் தோன்றுகிறது. என்றுள்.

**தா.**—சகி! எல்லாம் நடக்கட்டும், நாமென்ன செய்வது. எல்லாம் ஈசன் செயல். நீயாதொன்றுக்கும் கவலைப்படவேண்டாம். நான், உன்னை என் உயிருள்ள வரையில் காப்பாற்ற கடமைப்பட்டிருக்கிறேன். கடவுளும் அனுக்கிரகம் புரிவார். என்று பலவாறு தேறுதல்கள், கூறினுள். மேனகாவும் தாயென மதித்த தாராவதியின் போஷணையில் கவலையின்றி இருந்தாள். புஷ்பாவதி, தினந்தோறும் மேனகாவின் இருப்பிடம் வந்து தன் தம்பியை மணக்கும்படி வற்புறுத்தினுள். எதற்கும் மேனகா இடந்தரவில்லை. அதைக் கண்ட புஷ்பாவதி இனி நம்மிடம் பலிக்காது என்றெண்ணி புஜங்கனை வரவழைத்து அவனைக்கொண்டே காரியத்தை முடிக்க வேண்டுமென்று நினைத்து உடனே டெலிபோன் மூலமாய் தன் தம்பியைப் புறப்பட்டு வரும்படி கூறினுள். வேறு சமாசாரங்கள் ஒன்றும் கூறுமல் தன்னை மாத்திரம் வரச்சொன்னதை நினைத்த புஜங்கன் தன் சகோதரிக்கு ஏதாவது வியாதி நேரிட்டதோவென பயந்து உடனே புஷ்பாபுரியை விட்டுப் பிரயாணமாகி, மோகினிபுரி அரண்மனையை அடைந்து அரசனைக் கண்டு க்ஷேம லாபங்களை அறிந்து, புஷ்பாவதிக்கு நோவு ஒன்றுமில்லை என்று தெரிந்துகொண்டு பிறகு அரசனிடம் விடைபெற்று அந்தப்புரத்தில் அக்காளைக் காணவேண்டி வந்தான். தம்பியைக் கண்ட புஷ்பாவதி ஆநந்தங்கொண்டு நல் வரவுகூறி தாய், தந்தையரின் சுகத்தைக் கேட்டறிந்தாள்.

**புஜ**—அக்கா, நீ டெலிபோன் மூலமாய் அவசரமாய் புறப்பட்டு வரும்படி கூறியதைப்பற்றி நான் பயந்துவிட்டேன். நல்ல காலமாயிங்கு ஒருவித இடையூறும் நேரிடவில்லை.

**புஷ்.**—தம்பீ, நான் வேறு ஏதாவது கூறினுல் நீ தாமதப்

படுத்திவிடுவாயே என்று நினைத்துத் தான் உடனே வரும்படியாகக் கூறினேன்.

புஜ.—அவ்வளவு அவசரமான சங்கதி என்ன ?

புஷ்.—நல்ல விஷயம்தான். அதைரியப்படாதே. நம்முடைய மேனகாவை உனக்கு மணம்புரிவிக்க எண்ணி அவள் விருப்பத்தை அறிந்ததில் அவளுக்குச் சம்மதமில்லையென்று தோன்றுகிறது. ஆதலால் நீ நேரில் வந்தால் உன்னுடைய ரூபத்திலும், பேச்சிலும் இணங்கி, மயங்கி, வழிக்கு வந்துவிடுவாள். நம்முடைய காரியம் கைகூடின பிறகுதான் அரசனிடம் கூறவேண்டும். நீ எப்படியாவது அவளை உன் வலையில் வீழ்த்திவிடு.

புஜ.—அக்கா ! உடன் பிறப்பென்றால் உனக்கே தகும். எனக்கு இந்தப் பேருதவியை யார் செய்யப்போகின்றனர். உன்னுடைய தயவும், அன்புமிருக்கிற வரையில் எனக்கு யாதொரு கவலையும், கஷ்டமும் நேரிடாதெனக் கூறி அப்பொழுதே மேனகாவை மணந்துவிட்டாற்போல் புளகாங்கிதனான். புஷ்பாவதி தன் சகோதரனுக்கு அறுசுவை யுண்டியளித்து புசிக்கச் செய்து, வாசனைத் திரவியங்கள் கலந்த சலவைச் சாந்தணியச் செய்து, திவ்ய வஸ்திராபரணங்களினால் அலங்கரித்தனள். புஜங்கனும் நிலைக் கண்ணாடியில் தன் ரூபத்தை நோக்கி இறுமாப்படைந்து இனி நம்மைவிட அழகுடையவன் உலகிலெவருமில்லையென்று எண்ணிக் கர்வமடைந்தான். புஷ்பா, தன் சகோதரனையும் உடன் இட்டுக்கொண்டு மேனகாவினறையை நாடிச்சென்றாள். இவர்களின் வரவையறிந்த தாரா, மறைவிடம் புகுந்தனள். சகோதர, சகோதரிகளிருவரும் ஆடம்பரமாய் வெகு உல்லாசத்துடன் அறைக்குள் நுழைந்ததும், இளவரசி உடனே எழுந்து இருவருக்கும் வந்தனமளித்துச் சிற்றன்னாய், மாமா, வாருங்கள். மாமா, தங்கள் தரிசனம் ஏதோ அத்தி பூத்தது போலிருக்கின்றதே, எப்பொழுது வந்தீர்கள். ஊரில் யாவரும் க்ஷேமந்தானே என்று வினவினாள். உடனே புஷ்பாவதி, மேனகா ! என்ன போ, உன் மாமன் உன்னைவிட்டுப் பிரிய மனமில்லாமல் அடிக்கடி இங்கு

உன்னைக் காண, வந்துவிடுகிறான் என்று கூறி யாவரும் அங்கு போடப்பட்டிருந்த வெல்வெட் ஸோபாவின் மீதமர்ந்தனர். புஜங்கன் யாதொன்றும் பேசவேயில்லை. புஷ்பாவதி சற்று நேரம் உரையாடிக்கொண்டிருந்து விட்டுப் பிறகு புஜங்கனுக்கு ஒருவித சமிக்ஞை செய்துவிட்டு எழுந்து, குழந்தாய் மேனகா, எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கின்றது, நான் சென்று வருகிறேன். நீங்கள் பேசிக்கொண்டிருங்களென்று கூறி வெளியே சென்று விட்டாள். **புலிக்கூட்டங்களி னிடையிலகப்பட்ட மான்பேடுபோல்** மேனகா, மனதிற்குள் திகிலடைந்து பதறினாள். சற்று நேரம் இருவரும் மௌனம் சாதித்தனர். பிறகு புஜங்கன் நாம்தான் முதலில் பேசுவோமென நினைத்து மேனகா, உனக்குத் தாதிமார்கள் நியமிக்கவில்லையா. தனிமையாக இருக்கின்றாயே என்றான்.

**மே**—இருக்கின்றனர், நான் அழைக்கும் பொழுதுதான் வருவார்கள்.

**பு**—அப்படியா, ஏன் உனக்குப் பக்குவகாலம் வந்ததும் உன் தந்தை மணம் செய்விக்கவில்லையே.

**மே.**—எனக்குத் தெரியாது, அதைப்பற்றின கவலை தங்களுக்கு வேண்டாம். என்ன அவசரம், இப்பொழுது விவாகத்திற்கு.

**பு**—அப்படியில்லை, நீ ஒரு நல்ல ராஜகுமாரனை அடைய வேண்டுமென்பது என்னுடைய கோரிக்கை. அதற்கு என்னிலும் மேம்பட்டவர் இவ்வுலகில் கிடையாது, நானும் உன் மீது உண்மையான காதல்கொண்டு பரிதவிக்கின்றேன். நீ யாதொரு தடையுமின்றி (ஆகட்டுமென்று) பதிலளிப்பாய்.

**மே.**—மாமா, நான் தனிமையாக விருக்கும் இச்சமயத்தில் தாங்கள் இந்த மாதிரி உரையாடுவது சரியல்ல. யாரேனும் கண்டால் என்னை நிந்தனை செய்வார்கள், அஃதுமன்றி என் சிற்றன்னையே என்னைக் கோபிப்பார்கள். தயவு செய்து உடனே எழுந்து வெளியில் சென்றுவிடுங்கள்.

**பு.**—கண்மணியே, காதலீ, சீமாட்டி என் மனக்குறையை நீக்கும் மணியாட்டி, என்தேனே, என்மானே, மடவன்னமே,

பைங்கிளியே, பொற்கொடியே. என் உயிர் போகாமல் பாது காப்பது உன்கடமை. நான் என் சகோதரியின் சம்மதியின் பேரில்தானிங்கு வந்தேன். இங்கு எவரும் வரமாட்டார்கள், மேனகா! விரகதாபத்தினால் தவிக்கும் என்னை உன் அதரத்தி னுலாகிய முத்தமென்னும் தண்ணீரைக் கொடுத்து சாந்தம் செய்வாயென்று பலவாறு வாயில் வந்தபடியெல்லாம் பிதற்றி னன். இவ்வளவிற்கும் மேனகா, மூடர்களைப்போல் ஆத்திரப் பட்டுக் கோபமடையாமல், சாந்த குணத்துடனேயே மாமா, என்ன, நீங்கள் இப்படி மதியை இழந்துவிட்டீர்கள். இந்த மாதிரியான வார்த்தைகளையெல்லாம் யாரிடத்தில் பேசுவது, காமமெனும் பேயை விட்டுவிடுங்கள். ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா பகவத் கீதையில் அர்ஜுனனுக்கு

ஏவம் புத்வே: பரம் புத்வா,
ஸம்ஸ்தப் யாத்மான மாத் மநா,
ஜஹி சத் ரும் மஹா பாஹோ,
காம ரூபம் துரா சதம், என்று உபதேசம் செய்

தார். அதாவது புத்தியைவிட மேலான காமத்தை ஞான யோகத்திற்கு விரோதியான சத்ருவென நினைத்து, மனதைப் புத்தியினால் நிலை நிறுத்தி இந்தக் காமமெனும் பெயரையுடைய ஜயிக்க முடியாத சத்ருவை நாசம் செய்துவிடு என்றார். அப் படிப்போல் காமமானது மனிதனுடைய விரோதி. இந்திரன், சந்திரன், ராவணன் முதலிய மகா பலம் பொருந்திய வீரர்க ளெல்லாம் பெண்ணாசைகொண்டு கெட்டார்கள். மாமா, நீங் கள் யாவற்றையு முணர்ந்து நன்றாய் யோசித்து மனதை நல்வழி யில் திருப்பி நன்றாயிருங்கள். வீணாகக் கெட்டுப்போகாதீர் கள். சீக்கிரமாக எழுந்து வெளியில் செல்லுங்களென்று கூறினாள். இவை யாவும் செவிடன் செவியிலூதினசங்கு போல் பயனின்றிப் போயின. மறுபடியும் புஜங்கன் என் கண்ணே, மேனகா, உனக்கு ஏன் மீது தயவு பிறக்கவில்லையா. நான், என்ன, ரூபத்திலும், செல்வத்திலும், மதியிலும் தாழ்ந்த வனா? நீ யோஜனை செய்து பார். நீ என்னை விவாகம் புரிந்தால் சக்ரவர்த்தினிபோல் மிகவும் சந்துஷ்டியுடன் காலங்கழிக்கலாம்.

என் சொல்லுக்கு உடன்பட்டுவிடு. இல்லையாகில், மிகவும் வாதைப்படுவாய். என் கிள்ளையே என்று, தலை கால் தெரியா மல் குடிவெறியனைப்போல் பிதற்றினன். மிகவும் பொருமை யையுடைய நம் மேனகாவுக்கும் கோபம் பிறந்து, அடே துன் மார்க்கா, மூடா, மதிகேடா, கழுதையறியுமோ கல்பூர வாசனை. உனக்கு பகவான் அருளிச்செய்த பகவத் கீதையைக் கூறி என்ன செய்வது. உனக்கு விநாசகாலம் கிட்டிவிட்டது. கேடு வரும் பின்னே மதி கெட்டு வரும் முன்னே என்றபடி கெட்ட காலத்திற்குத்தான் நீங்கள், அக்காளும் தம்பியும், இந்த மாதிரி யோஜனை செய்தீர்கள். உங்களின் தன்மை நன்றாய் விளங்கி விட்டன. மரியாதையுடன் சீக்கிரம் சென்றுவிடு என்று கூறி ஓர்வித சப்தம் செய்தனள். உடனே தாராவதி எங்கிருந்தோ வருபவள்போல் அறைக்குள் வந்துநின்று, அப்பொழுதுதான் அவர்களைக் காண்பவள்போல் நடித்து மாமா, நமஸ்காரம். எப்பொழுது வந்தீர்களென்று வினவினள். புஜங்கனுக்கு யாதொரு பதிலும் கூறத் தோன்றவில்லை. நல்ல சமயத்தி லிவள் வந்துவிட்டாளே யென்று தாராவதியின்மீது வெறுப்புக் கொண்டு, மேனகாவை நோக்கி, மேனகா, நான் சென்று நாளைய தினம் வருகின்றேன். நான் கூறியது நினைப்பிலிருக்கட்டும். மறந்துவிடாதே யென்று கூறி வெளியில் சென்றுவிட்டான். மேனகா, தாராவதியைப் பார்த்து விம்மி, விம்மியழுதாள். தாரா வும் கண்களில் நீர் ததும்ப ப்ரியே! தைரியத்தைக் கைவிடாதே; நடப்பதெல்லாம் நடக்கட்டும்; எல்லாம் ஈசன் செயலே ஒழிய வேறில்லை. அப்படி மிகவும் மிதமிஞ்சினல் எனக்கு அதற்குத் தக்க ஏற்பாடு செய்ய தெரியும். நீ கவலைப்படாதே என்று தேறுதல் மொழிகள் கூறினள்.

மே.—தாரா, நான் என்ன செய்குவேன்! என பிதாவும் இதற்கு உடந்தையாக இருப்பாரோ, என்னமோ.

தா.—சகீ. என்ன, இவ்வளவு கோழைத்தனமடைகிறாய். உன் பிதாவின் எண்ணத்தையும் நான் அறிந்துவிடுகிறேன். நீ வீணுக வர்த்தப்படாதே; எழுந்திரு; சற்றுநேரம் உலாவிவரு வோம். வா என இருவரும் எழுந்து வேறு உடைகளணிந்த

னர். அச்சமயத்தில் மற்றொரு தாதி ஓடிவந்து தோழிகளிருவருக்கும் வந்தனமளித்து அம்மணி, தங்கள் தந்தையர் உங்களை அழைத்துவரும்படி ஆஞ்ஞாபித்தாரென்று பகர்ந்து சென்றுவிட்டனள்.

மே.—தாரா, இன்னும் அநேக இடையூறுகள் வரும்போலிருக்கின்றன. இந்தப் பாபிகள் ஏதாவது என் தந்தையிடம் கூறிக் கலகம் மூட்டி வைத்திருப்பார்களென்று நினைக்கிறேன். பயமாயிருக்கிறதே.

தா—தோழி, இருக்கட்டும். உன் தந்தையினுடைய மனவிருப்பத்தையுமறிந்து நாம் மேல் நடக்கவேண்டிய காரியங்களை ஆலோசிக்கலாம். சென்று வருவோம் வா; என இருவருமெழுந்து அரசனரண்மனையை நோக்கி நடந்தனர்.

இஃது இங்ஙனமிருக்க, நம் மேனகாவின் அறையை விட்டுச்சென்ற புஜங்கன் நேராகத் தன் சகோதரியின் இருப்பிடம் சென்று நடந்த வரலாறுகள் யாவற்றையு முரைத்தான். அவைகளைச் செவியுற்ற புஷ்பாவதி, நாகம்போல் சீறி எழுந்து கண்களில் தீப்பொறி பறக்க, அடி சண்டாளி, என் உடன்பிறந்தவனையா நீ வாயில் வந்தபடி திட்டுவது, இருக்கட்டும். அவனுக்கே உன்னை மணம்புரிவித்து, உன் திமிறையடக்குகின்றேன் என்று கர்ஜித்து அடா, தம்பீ, நான் அரசனிடம் கூறி எப்படியாவது தந்திரமாய் அவளையே உனக்குக் கட்டாவிடில் என் பெயர் புஷ்பாவதியல்ல என்று கோபத்துடன் மொழிந்து தன் தாதியை அனுப்பி அரசனை வரவழைக்க, புஜங்கன் வெளியில் சென்றுவிட்டான்.

அர.—காதலீ! என்னை இந்த அகாலத்தில் வரவழைத்த காரணம் யாது உளது.

பு.—நாதா, ஒன்றுமில்லை. சற்றுநேரம் சில சங்கதிகள் உரையாடவேண்டி வரவழைத்தேன். நம்முடைய மதலை மேனகா பக்குவதசையை யடைந்தும் விவாகம் புரிவிக்க யாதொரு ஏற்பாடும் நீங்கள் ஏன் செய்யவில்லை.

அ.—(மனதிற்குள் இவளுடைய பகட்டான அன்பை மெய்

யென நினைத்து,) மகிழ்ந்து புஷ்பா! ஆஹா!! உனக்கிருக்கும் கவலைகூட எனக்கு இல்லையே, நல்லது நான் தகுந்த ராஜபுத்திரர்களை வரவழைத்துப் பார்க்கிறேன். நல்லகாலமாய் நினைப் பூட்டினாய்.

பு—நாயகா, கையில் வெண்ணையை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைவது போலிருக்கிறது உங்கள் சமாசாரம். நம்முடைய புஜங்கனிருக்கையில் வேறு வரன் தேடுவானேன்.

அ.—ப்ரியே! அதுவும் எனக்குச் சம்மதிதான். ஆனால் என் குழந்தையின் விருப்பத்தை அறியவேண்டும்.

பு—அப்படியா! தாய், தந்தையருள்ளபோது பெண்களின் இஷ்டமெதற்காகவேண்டும். அவனுக்கு மேனகாவைக் கொடுக்காவிடில் நான் உங்கள் மனைவியென்று எண்ணவேண்டாம்; எப்படியாவது உயிரை மாய்த்துக்கொண்டு விடுவேன்.

அ.—(இச்சமயத்தில் தான் மதுரவேணி, தாராவதியிடம் கூறிய வாக்கு பலித்தது). புஷ்பா, என் கண்ணே, நீ வருத்தப் படாதே; உன் பிரியப்படியே நடத்திவிடுவோம்.

பு.—நாதா! ரொம்ப ஆநந்தம்; உங்களைப்போல் தயாள குணமுள்ளவர்கள் எவரும் கிடையாது. நான் இவ்வித விடைக்குத்தான் எதிர்பார்த்திருந்தேன். நமக்குள் சம்மந்தம் முடித்தால் மிகவும் நல்லதல்லவா? மேனகாவை யழைத்து என் முன்னிலையில் கூறிவிடுங்களென, அரசனும் தாதியை அனுப்பினான். மேனகா, தாரா இருவரும் அரசனினந்தப்புரம் அணுகி தாராவை வெளியில் நிறுத்திவிட்டுத் தான் மாத்திரம் உட்புகுந்து பிதாவை நமஸ்கரித்து நின்றாள். அரசன் மகளை ஆசீர்வதித்து, மேனகா, உன்னை என் மைத்துனனான புஜங்கனுக்கு விவாகம் செய்விக்க எண்ணி, அதை உன்னிடம் கூறுவதற்காக வரவழைத்தேன் என்றான்.

மே.—தந்தாய், நான் தங்களை மிகவும் வேண்டி ஒரு உத்திரவு கொடுக்கவேண்டுமாய் ப்ரார்த்திக்கிறேன்.

அ.—என்ன உத்திரவு?

மே.—எனக்கு இன்னும் இரண்டு வருடங்களுக்கு விவாகம் வேண்டாம்.

**புஷ்.**—என்னடீயது, நீலித்தனம். விவாகம் வேண்டுமென்பதும் வேண்டாமென்பதும் உன்னுடைய இச்சையா; நாதா, இவளை என்ன கேள்வி; விவாகம் செய்யாவிடில் நமக்கல்லவோ அவமானம்.

**அ.**—சரி, நல்லது, மேனகா, தந்தை சொல்மிக்க மந்திரமில்லை என்னும் பழமொழியையும் மறந்து நீ எனக்கு மறுமொழி கூறினாய். நான் என்னுடைய இஷ்டப்படி செய்துகொள்ளுகிறேன். நீ உன்னரண்மனைக்கு செல்வாயென்று அதட்டிக் கோபமாய் மொழிய, அதைச் செவியுற்ற மேனகா உடல் பதறி, நடுக்கங்கொண்டு, பிதா, நமஸ்காரம், நான் சென்று வருகிறேனென்று கூறி வெளியில் வந்து தாராவதியுடன் தனதிருப்பிடம் அணுகி தாரா, என்னுடைய கதி எவ்வாறு முடிந்தது பார்த்தாயா. என் விதிவசமன்றோ யிது; யாரை நொந்து கொள்ளுவது. இனி நான் என்ன செய்குவேன். நான் கூறியபடியே இந்தப் பாபிகள் என் தந்தையின் மனதையும் கலைத்துத் தங்கள் வசமாக்கிக் கொண்டனர். சகியே! நான் இனிமேல் தடையின்றி உயிரை மாய்த்துக்கொள்ளவேண்டியதுதான் என்று ப்ரலாபித்தாள். தாராவதியும், அரசி மதுரவேணி தன்னிடம் கூறின சொற்களையும்; அது தத்ரூபமாய் நடந்ததையும் கண்டு ப்ரமித்துப்போய் கண்மணியே! மேனகா! அறிவிலிகள் போன்று அழுது உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே. உன்னுடைய அதிர்ஷ்டம் அவ்வளவு தான்; எழுந்திரு சற்று நேரம் நந்தவனம் சென்று வரலாமென்று ரொம்ப தூரம் வேண்ட மேனகாவும் சம்மதிக்க, இருவரும் வனத்து ஊஞ்சலில் வந்தமர்ந்தனர். மேனகா, தனக்கு நேரிட்டிருக்கும் ஆபத்துக்களையும், தன் தாயையும் நினைத்துக் கண்ணீருதிர்த்து, தாரா! புஜங்கன் எனக்கேற்ற மணவாளனுவானு என்று மிக வர்த்தத்துடன் மொழிந்தாள்.

**தா.**—தோழி! நீ என்ன, என் மனதைப் பரிசோதிக்கின்றாயே; அவனுடைய துர்க்குணங்களும், டாம்பீகச் செய்கைகளும் உனக்குத் தெரியாத விஷயமா. அவனை மணந்து செல்வமிகுந்த இந்நாட்டில் வாழ்வதை விட கடும்புலி வாழுங் காட்டில் காலங்கழிக்கலாமே காய் கனிகளைத் தின்றுகொண்டு. புஜங்கனும் ஓர் மனிதனு!

மே.—தாரா! இச்சமயத்தில் நேரிட்டிருக்கும் இடையூறு கள் நமக்கு நீங்காதவைகள் போல் தோன்றுகிறது. ஏனென்றால் என் தந்தை, புஷ்பா, புஜங்கன் மூவரும் ஒருமைப்பட்டு ஒரே மனத்தினராயிருக்கின்றனர். இனி நாமென்ன கூறின போதி லும் பயன்படாது. ஆதலால் இனி நாம் பிழைக்கவேண்டிய ஏற்பாடுகளை நீ தான் கூறவேண்டும்.

தா.—மேனகா! நான் என்னவென்று கூறுவேன். இன் னும் சில நாட்கள் பொருத்துப் பார்ப்போம். பிறகு நமக்கு ஒன்றும் சரியாக வராவிடில் எங்கேயாவது சென்றுவிடுவோ மென்று இருவரும் வாதாடிக் கொண்டிருக்கும் சமயத்தில் ஓர் அசரீரி வாக்குப் பிறந்தது. அஃது யாதெனில்! மேனகா! நீ கவலையை ஒழி, வருத்தத்தை விட்டுவிடு, பகுத்தறிவுள்ள மனிதர்கள், சுக துக்கங்களிரண்டையும் சமமாகப் பாவிக்க வேண்டும். சுகம் வரும்பொழுது மிதமிஞ்சின சந்தோஷமும், துக்கம் வரும்பொழுது மட்டுக்கு மிஞ்சின வருத்தமும் கொள் வது மூடர்களின் கொள்கை. பல கலைகளும் கற்றுணர்ந்த நீ துக்கமுறுவது அழகல்ல. நீ ஒருக்காலும் புஜங்கனுக்கு மனைவி யாகமாட்டாய். உன் தந்தை இன்னும் ஒருவார காலத்திற்குள் ஓர் பரதேசியை அழைத்து வருவார். ஆனாலவன் உண்மைப் பரதேசியல்ல. அவன் ஒரு தேசத்து ராஜகுமாரன்; அவனுடைய விதிவசத்தினால் தாய், தந்தையரையும் தான் அரசகுமாரனென் பதையும் அறியாமல் இருக்கிறான். அவன் தான் உனக்கேற்ற கணவன். உன்னை ஆபத்துக்களினின்று மீட்டு, உன்னையே மனைவியாக அடைந்து, நாடு, நகர் பெற்று சுகமாயிருவரும் வாழ்ந்திருப்பீர்களென்று கூறி நின்று விட்டது. இந்த மொழி களை யாவற்றையும் செவியுற்ற நேசிகளிருவரும் திடுக்கிட்டு, ப்ர மித்து, ஹே! ஆகாய வாணி! நீ தான் எங்களுக்குத் துணை. அனாதைக்குத் தெய்வம் துணையென்பது எங்களிடம் தான் உண்மையாய் பலித்தது என்று கூறி, வந்தனம் புகுந்து சந் தோஷ சித்தர்களாய்க் கவலையை ஒழித்து அரண்மனை சேர்ந்து பரதேசி போன்ற மேனகாவின் மணாளனின் வரவை எதிர்பார்த் திருந்தனர்.

---

## 3-ம் அத்தியாயம்.

ஓர் தினம் அப்பட்டணத்திற்கடுத்த கானகத்தில் ஒரு வாலிபன் அங்குள்ள காக்ஷிகளையெல்லாம் கண்டு. ஆஹா! என்ன ஆநந்தம்! இந்த மிருகங்களெல்லாம் எவ்வளவு உல்லாசமாக விளையாடுகின்றன; பக்ஷி ஜாதிங்கள் யாவும் களிப்புடன் அநந்தத் தாண்டவம் செய்கின்றன. மரம், செடி கொடிகளெல்லாம் ரமணீயமாகத் தோன்றுகின்றனவே! மலர்கள் யாவும் தங்கள் மனத்தை யாவரும் அறிவதற்காக வாஸனையை வீசுகின்றன. யாவற்றிற்கும் களிப்பையளித்த கடவுள் மானிட ஜென்மமெடுத்த எனக்கு யாருமற்ற அனாதையாக இருக்கும்படி கடுமை விதித்தாரே. தாய், தந்தையரைக்கூட அறிய முடியவில்லையே! நான் என்ன பாபம்செய்தேனோ தெரியவில்லையே!! யாவற்றையு மறந்திருப்போ மென்றாலும் வயிற்றின் கொடுமை சகிக்க முடியவில்லையே! ஹே! தயா நிதி, கருணா நிதி, கிருப கடாக்ஷா, ஆபத்பாந்தவா, என் செய்குவேன், நான் முன்செய்த தீவினையோ இது!

> மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
> தானந் தவமுயற்சி தாளாண்மை—தேனின்
> கசி வந்த கன்னியர்மேற் காமுறுதல் பத்தும்
> பசி வந்திட பறந்துபோம்

என்னும் வாக்கியம எனக்கேதகும். என் குக்ஷி பாதையை நீக்க யாதொரு வழியுமில்லையே என்று தன் தலை விதியை நொந்து கொண்டு எழுந்தான். நடக்கமுடியவில்லை, கால்கள் துவண்டன, நா வறண்டன, ஆவி புறண்டது. என்ன செய்வான் பாபம். ஆஹா, தெய்வமே! அதோ தெரிகிற நகரத்திற்குள் சென்று வது பிழைப்போமென்றால் கால்கள் நடக்க முடியவில்லையே, என்னே, இப்பசியின் கொடுமை.

> ஒரு நாளுணவை ஒழியென்றா லொழியாய்
> இரு நாளைக் கேலென்றால் ஏலாய்—என்னோ
> வறியா யிடும்பை கூறென் வயிரே
> உன்னோடு வாழ்வது அரிது

என்று ஔவை கூறியவாக்கியம் பொய்த்துப் போகவில்லையே,

கடவுளே, கண்ணா, மணிவண்ணா என்னை இப்படி சோதனைச் செய்யலாமா. என்னப்பனே! கிருபாநிதியே!!

ஊரிலேன், காணியில்லை, உறவினர்மற்றொருவரில்லை,
பாரில், நின் பாதமூலம், பற்றினேன்—பரமமூர்த்தி
காரொளி வண்ணனே, என் கண்ணனே கதறுகின்றேன்,
ஆருளர் களைகணம்மா, அரங்கமா நகருளானே.

ஏ பகவானே! நான் இப்படிப் பரிதவிப்பது உமக்குத் தெரியவில்லையா!! அனாதைகளை ஆதரிப்பது உன் கடமையல்லவா. சகல ஜீவராசிகளையும் காப்பதும் அழிப்பதும் நின் செயலல்லவா; மிகவும் கொடியோனான என் மீது மாத்திரம் இரக்கம் வரவில்லையே! ஏ கிருஷ்ணா!! மதுசூதனா! கோவிந்தா!! நீரென்ன செய்வீர் உம்மை வெறுப்பது மதியீனம்,

தாந்தா முன் செய்த வினை தாமே யனுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒருத்தாரை யென் செயலாம் ஊரெல்லாம் கூடி
வெறுத்தாலும் விடுமோ விதி

என்றபடி என் ஊழ்வினையின் பயன் நான் அனுபவிக்கிறேன் என்று வாய்விட்டு ப்ரலாபித்துக்கொண்டிருக்கும் சமயத்தில் காட்டகத்தில் வேட்டையாட வந்த மகாநந்த மகாராஜனும், மந்திரி மதியூகியும் இச்சப்தத்தை செவியுற்று, ஆஹா! யாரோ தெரியவில்லையே, இந்தக் குரல் மிகவும் இனிமையாயிருக்கின்றதே; மந்திரி! நான்குபுறமும் தேடுவோம் வா, என்று இருவரும் சுற்றிப் பார்த்து வாலிபனிருக்கும் மரத்தடியில் வந்து அவனைக் கண்டு பையனே, நீ யார்? நீ ஏன் வெகு துக்கத்துடன் மனவருத்தத்தை வெளியிட்டு ப்ரலாபிக்கின்றாய்? உனக்கு நேரிட்ட வியாகூலம் யாது? என்று வினவ, இவர்களிருவரையும், செவியுற்று அரசன் கூறின மொழிகளையும் கேட்டு வாலிபன், திடுக்கிட்டெழுந்து நமஸ்கரித்து, வேந்தரே! யானொரு பரதேசியென்று விடை பகர்ந்தான். அரசன் வியப்புற்றுக் குழந்தாய் நான் அரசனென்பது உனக்குத் தெரியவருமோ என்று வினவ,

வா.—ப்ரபுவே! நான் அறியமாட்டேன், தங்கள் முகார

விந்தத்தின் லக்ஷணங்களைக் கண்டு, தாங்களிவ்வுலகத்தை அரசாளும் பூபதி என்று நினைத்தேன். அது தவறுதலாக இருந்தால் க்ஷமிக்கவேண்டும்.

அ.—அப்படியா. உன் புத்தி சாதுர்யத்தை என்னவென்று கூறுவேன். பையனே, உன்னுடைய பெயர் யாது?

வா.—என் பெயர் **சந்திரன்.**

அ.—ஆஹா, பெயருக்கேற்ற ரூபமும், ரூபத்திக்கேற்ற மதியும் குணமும், குளிர்ந்த பார்வையும் உன்னிடம் பொருந்தி இருக்கின்றன. அப்பனே, சந்திரா! நீ எந்த வருணத்திலவதரித்தவன்? உனக்கு மாதா, பிதா, சகோதர, பந்துக்கள் யாராகிலும் உண்டா?

ச.—அரசே! எனக்கு கடவுளைத் தவிர வேறு எவருமில்லை. என்னுடைய குலமும் தெரியாது, என்னுடைய வரலாறுகள் எனக்கே தெரியவில்லை. நான் தேசங்கள் தோறும் சென்று, ஏதோ கடவுளினருளால் பெற்றிருக்கும் கல்வித் திறமையினால் ஜீவித்து வருகிறேன்; நான் ஒரு அனாதை, என் ஐயனே.

அ.—சந்திரா, உன்னுடைய சரிதம், எனக்கு மிகவும் துன்பத்தை யுண்டாக்குகின்றது. நீ என்னுடன் அரண்மனைக்கு வந்து சுகமாய் வாழலாம் வருகிறாயா? உன்னுடைய விருப்பமெப்படி?

ச.—பூபதி, இப்படிக் கூறி அழைப்பவர்கள் கூட எனக்கு இம்மாநிலத்திலுண்டா. கடவுளை நம்பினோர் **கைவிடப்படார்.** தங்கள் வாக்கியத்தை மீறாமல் நான் வருவதற்குத் தயாராகவிருக்கிறேன்.

அ.—மந்திரீ, நம்முடைய ரதத்தை இங்கு கொண்டுவா என்று கட்டளையிட மதியூகியும் ரதத்தைக் கொணர்ந்து நிறுத்த அரசன், சந்திரன் இருவருமேறி அமர்ந்தனர். மதியூகியும் ஏறி சாரத்தியம் செய்து மோகினிபுரியை அடைந்தார்கள். மகாநந்தன், மிகவும் களையாயிருந்த நம் சந்திரனுக்கு அறுசுவையுண்டியுமளித்து புசிக்கச் செய்து மனக் கவலையை விட்டு நிம்மதியாய் நித்திரை செய்வதற்கு வசதியாய் ஓர் அறையை விட்டுப் படுத்துக்கொள்ளும்படி செய்தான். மறு தினம் அரசன், சந்தி

ரனைத் தன் கொலுவிற்கு அழைத்துச் சென்று யாவருக்கும் அறி முகமாக்கி வைத்தான். பிறகு சந்திரனுக்குத் தனியாக ஓர் விடுதியமைத்து, யாதொரு குறைவுமின்றி தன் புத்திரனைப் போல் அன்புடன் போஷித்து வந்தான். சந்திரன் அரண்மனை யில் வந்திருக்கும் சங்கதி, மேனகா, தாரா, புஷ்பா, மற்று முள்ள யாவருக்கும் எட்டின. ஒரு நாள் மாலை, சந்திரன் பொழுது போக்குகிற்காக நந்தவனத்தில் உலாவிக் கொண்டிருக் கையில் புஷ்பாவதி அவனைக் கண்டு மயங்கி, பதிவ்ரதா தர்மத் தை மறந்து, மோகங்கொண்டு, உடனே தன் தாதியை அனுப்பி சந்திரனை தனதிருப்பிடத்திற்கு அழைத்து வரும்படியாக ஆஞ் ஞாபிக்க, அவளும் அக்கட்டளையை சிரமேற்கொண்டு சந்திர னிடம் சென்று வணங்கி, ப்ரபு, எங்கள் இளைய மகாராணியார் தங்களை அழைத்து வரும்படிக் கட்டளையிட்டனர் என்று வணக் கத்துடன் மொழிய, சந்திரனும் தனக்குத் தாய் போன்ற அரசி கூப்பிடுகிறாளே என்று எண்ணி யாதொரு தடையும் கூறாமல் தாதியுடன் வந்தான். சந்திரனைக் கண்ட புஷ்பா, அகங் குளிர்ந்து, இவனை எப்படியாவது வசப்படுத்த வேண்டுமென நினைத்துத் தாதிகள் யாவரையும் வெளியில் அனுப்பிவிட்டாள். சந்திரன் புஷ்பாவதியைக்கண்டு அன்னாய், நமஸ்காரம், என்று கூறி நமஸ்கரித்து மிகவும் வணக்கத்துடன் நின்றான். உடனே புஷ்பா, மகராஜ் ப்ரபுவே, தாங்களிம்மாதிரி, உரையாடுவது தகாது. ஏன் நிற்கவேண்டும் உட்காருங்களென்று ஆசனமளித் தாள். அவள் வசனத்தைக் கேட்ட சந்திரன் திகிலடைந்து என்ன ராஜமகிஷி, இந்த மாதிரி பேசுகிறாளே உன்று எண்ணி அம்மணி, யாருமற்ற அனாதையான என்னை அழைத்து வந்து ஆதரிக்கும் பிதாவின் பட்ட மகிஷியான தாங்கள் எனக்கு அன்னையல்லவோ. என்னை நீங்கள் மரியாதை வைத்தழைப்பது தகாது, என்று கூறி நின்றுகொண்டேயிருந்தான்.

பு—சந்திரா, நான் உன்னிடம் ஏன் மறைக்கவேண்டும் உண்மையைக் கூறிவிடுகிறேன். நான் உன் மீது கொண்டிருக்கும் மோகத்தை நீ நிவர்த்தி செய்யவேண்டும். அதற்காகத்தானிங்கு தனியாக வரவழைத்தேன் என்று ஆசை மீறிக் கூறினாள்.

அதைச் செவியுற்ற சந்திரன், இரு செவியிலும் கரத்தை வைத்து மூடிக்கொண்டு, நாராயணு, கோபாலா, வாசுதேவா, ஆஹா, ராஜ மகிஷிகளுக்கும் இவ்விதமான துர் புத்திகளுண்டாகுமா அல்லது இதுவும் என்னுடைய காலவசமோ, அம்மணீ மகாராணியே நான் சென்று வருகிறேனென்றனன்.

பு—சந்திரா, என் மீது இரக்கமில்லையா. நீ என்னைக் கூடினுல் சர்வசம்பத்துக்களும் கூடிய இந்த அரசுரிமையை எவ்விதத்திலும் உனக்கே தரும்படி செய்குவேன். ஆதலால் என் சொல்லை மீருதே, மீறினுல் உனக்கே கெடுதி நேரிடும் ஜாக்ரதை.

ச.—அப்படியா, சீ சீ நீயும் ஒரு பெண் ஜன்மமா, அல்லது பெண் பிசாசமோ. உன் முன் நின்று உரையாடினுல் கூட எனக்குப் பாபம் சம்பவிக்கும் என்று கூறி வேகத்துடன் தன்னிருப்பிடம் சென்றுவிட்டான். அவன் சென்றதும் புஷ்பாவதி அவன் இணங்காததிற்கு மிகவும் வருத்தப்பட்டு, ஆஹா, நல்லது எப்படியாவது உன்னை வசப்படுத்தி என் ஆசை நாயகனுய் வைக்காவிடில் நான் புஷ்பாவதியல்ல, என்று வீரம் பேசி அந்தப்புரம் சென்றுவிட்டனள். இப்படியாக சில தினங்கள் கழிந்ததும் ஒரு நாள் மாலை மேனகாவும், தாராவதியும் தங்கள் வாசஸ்தலமான வனத்தூஞ்சலில் வந்து உட்கார்ந்து உரையாடத் தொடங்கினர்.

மே.—தாரா, நான் அடையப்போகும் ப்ராணபதியும், என் தந்தை அழைத்து வந்து ஆதரிக்கும் வாலிபருமான அந்த சந்திரனை நம்மால் ஒரு நாள் கூடக் காணமுடியவில்லையே.

தா.—சகியே, இனி நம்முடைய கஷ்டகாலம் விலகிவிட்டன. ஆகாய வாணி கூறிய யாவும் உண்மையாய் நடக்கின்றன. இனி மேல் நீ தடையின்றிச் சந்திரனை அடைவாய்; கவலையை யொழித்து விடு.

மே.—ப்ரிய! தோழியே!! நீ கூறும் யாவும் உண்மைதான். ஆனுல் என் தந்தை கூட என்னிடம் பேசுவதில்லை. இந்த மாதிரி எத்தனை நாள் காலங்கழிப்பதென்று தான் வர்த்தமாயிருக்கிறது.

தா.—மேனகா, நீ உட்கார்ந்திருந்தால் இப்படித்தான் எதாவது நினைத்து சஞ்சலப்பட்டுக்கொண்டேயிருப்பாய், எழுந்திரு.

மலர்கள் கொய்வோமென, இருவருமெழுந்து வேடிக்கையாய் வாசனை நிறைந்த மலர்களைக் கொய்து வந்தனர். அந்தச் சமயத்தில், அந்த நந்தவனத்திலேயே சந்திரன் ஒரு பளிங்குக் கல் மேடையின் மீதமர்ந்து. ஆஹா, பெண் பேயான இந்தப் புஷ்பாவதி, பெண்களுக்குரிய, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்றயாவற்றையும் துறந்து, என்மீது இச்சையடைந்து, நிர்ப்பந்தப் படுத்துகின்றனளே. இந்தச் சங்கதி அரசனிடம் கூறினால், அவர் கட்டாயம் அவளைக் கொலைசெய்துவிடுவார். அந்தப் பெண் பழி நம்மைச் சூழ்ந்துகொள்ளும். இனி நான் வேறு எங்கேயாவது சென்றுவிட வேண்டியதுதான் வழி என்று பல வித ஆலோசனைகள்செய்துகொண்டிருக்கையில், மின்னல் கொடி போன்று மலர் கொய்யும் நம் மேனகாவைக் கண்டு விட்டான். கண்டதும், அவனுடைய கல் நெஞ்சமும் உருகி, இவள் யார், நம் அரசனுடைய மகள் தானோ, அல்லது ரம்பையோ, ஊர்வசியோ, அல்லது வன தேவதையோ, தேவஸ்திரீயோ, கந்தர்வ மாதோ, இப்பேர்ப்பட்ட பெண்மணியை யல்லவோ அடைய வேண்டுமெனக் கூறிச் சற்று நேரத்திற்கெல்லாம் சீ, மனமே, என்ன நினைவுகொண்டாய். எட்டாப் பழத்திற்கு கோட்டாவி விடுவது போல், கேவலம் ஒரு வேளை உணவிற்கும் கதியற்ற, பரதேசியான நான், இராஜ குமாரத்தியை இச்சிப்பது தகுமா, என்று தனக்குத் தானே வெறுத்து, நாமிங்கிருந்தால் அவர்கள் கண்டுவிடுவார்களென்று நினைத்து எழுந்து செல்ல யத்தனித்தான். அத்தருணத்தில் மேனகா, சந்திரனைக் கண்டுவிட்டனள். ஆஹா! இன்றல்லவோ என் ஜன்மம் சாபல்யமாயிற்று. நான் இவரை மணம்புரிய என்ன பாக்கியம் செய்தேனோ. தாராவதி! நீ. சென்று சீக்கிரமாக அவரை யிங்கழைத்துவா, என்று கூற, உடனே, தாராவும் உள்ளம் பூரித்துச் சந்திரனை நாடி, ஓடி வந்து வணங்கி, ஐயனே, சரணம் என்று புகன்றனள்.

ச—ப்ரமித்து, யாரம்மா நீ?

தா—நான், அரச குமாரத்தியின் தாதி.

ச—இங்கு வந்த காரணம் யாது?

**தா**—தங்களை என் எஜமாட்டி அழைத்து வரும்படியாகக் கூறினார்கள்.

**ச**—எதற்காக ?

**தா**—எனக்குத் தெரியாது.

**ச**—சரி, தெரியாதென்றால் நான் வரமாட்டேன். நான் இது வரையில் பெண்பாலுடன் பேசினது கிடையாது. அதிலும் அரச குமாரத்தி; நான் வருவது அழகல்ல. நீ செல்வாயம்மா.

**தா**—நீங்களிப்படிக் கூறுவது தகாது. எங்கள் மேனகாவுக்கு நேர்ந்திருக்கும் ஆபத்து உங்களால் தான் தீரவேண்டும். எனவே, சந்திரனும், மேனகாவை அருகில் காண எண்ணி, ஆவல்கொண்டு, தாராவுடன் ஊஞ்சலினருகில் வர, மேனகா சட்டென்றெழுந்து ப்ரபூ, வந்தனம்; அமருங்களென்று கூறி ஒரு ஓரமாக நின்றனள்.

**ச**—அம்மணி. என்னை அழைப்பித்த காரணம் யாதோ ?

**மே**—தாரா. என் வரலாற்றை நீயே உரைத்து விடுவாய்.

**தா**—இளவரசே! என்னுடைய யஜமானியான மேனகா, தங்கள் மீது காதல் கொண்டிருக்கின்றனள். அவளை அங்கீகரிக்க வேண்டும்.

**ச**—(உள்ளத்தில் தன் எண்ணப்படி முடிந்ததென்று களிப்படைந்து) என்ன கூறினாய்; இதென்ன அநியாயம்; நான் ஒரு முன் பின்னறியாத பரதேசி; என் மீது எவ்வாறு காதல் கொள்வது. நான் சென்று வருகிறேன்; அரசன் கண்டால் சிரசாக்கினை விதிப்பார்.

**தா**—ப்ரபுவே, தாங்கள் முன்கோபங்கொள்ளாமல் நான் கூறுவதைத் தயவுசெய்து நிதானித்துக் கேட்கவேண்டும்.

**ச**—என்ன கூறப் போகின்றாய் ?

**தா**—தங்களைப்பற்றி ஒரு அசரீரி வாக்குப் பிறந்தது. அதைப்பற்றிக் கூறுகிறேன் கவனிக்கவேண்டும்.

**ச**—என்ன! என்னைப்பற்றியா, என்ன வாக்கியம் பிறந்தது?

**தா**—தாங்களிந் நகருக்கு வந்து, எங்கள் இளவரசியை மணம் புரிகுவீரென்றும்; நீங்கள் ஒரு இராஜபுத்திரன், ஆனால் விதியின் வலிமையினால் யாதொன்றும் உங்களுக்குத் தெரியவரா

தென்றுப்; இன்னும் சொஞ்ச நாட்களில் கஷ்டங்கள் யாவும் விலகி நாடு நகரம் பெற்று இன்பமாய் மேனகாவுடன் வாழ்வீரென்றும் பிறந்தது.

ச—ஆஹா! என்ன, ஆச்சரியம!!

ஆலகால விஷத்தையும் நம்பலாம் ஆற்றையும்,
பெருங் காற்றையும் நம்பலாம்,
கோலமாமத யானையையும் நம்பலாம் கொல்லும்,
வேங்கை, புலி கரடியையும் நம்பலாம்,
காலனுர்விடு தூதரையும் நம்பலாம் கள்வர்,
வேடர், மறவரையும் நம்பலாம்,
சேலை கட்டிய மாதரை நம்பினோர்
தெருவில் நின்று தியங்கித் தவிப்பரே; என்னும்

பழமொழி சரியாகவிருக்கின்றது. நீ, கூறுவது யாவும், பொய்யான வார்த்தைகள். என்னை விவாகம் செய்வதற்காக இவ்வளவு கட்டுப்பாடுகள் ஏற்படுத்திக் கூறுகின்றுயே, என்று மொழிய; உடனே மேனகா, மிகவும் மனவாட்டமடைந்து, ப்ரபுவே, இளவரசே, என் உயிர்க் காதலனே, நீங்கள் கூறின பழமொழி மெய்தான். ஆனல் எல்லா ஸ்திரீகளுக்கும் அது பயன்படாது. நளாயினி, மிகவும் வியாதியஸ்தராய் வேஷம் போட்ட தன் பர்த்தாவை தலையில் வைத்துக்கொண்டு போய் தாசி வீட்டில் தினம் விட்டு காலையில் தன் வீட்டிற்குத் தூக்கி வந்தாள். மறு ஜன்மம் த்ரௌபதையாக அவதரித்த பொழுது, தன் பர்த்தாக்களுடன் ராஜ்ய சுகம் யாவற்றையும் துறந்து வனம் சென்றுள். தமயந்தியும் ஜானகியும் அவ்வாறே தங்கள் பர்த்தாக்களுடன் காட்டகம் ஏகினர். சந்திரமதியோ, தன் பர்த்தாவுக்காக அடிமை வேலை செய்தனள். நீங்கள் நன்றுய் யோஜித்துப் பார்க்கப் போனல் ஆடவரைத்தான் நம்பவொண்ணுது. ஏனென்றுல் த்ரௌபதியைச் சபையில் துயிலுரிகையிலும் மன்னர்கள் பார்த்துக்கொண்டிருந்தனர். நளன், வனத்தில் தமயந்தியைத் தனிமையாகப் புலம்ப விட்டுச் சென்றனன். சீதாப்பிராட்டியை, ஸ்ரீராமர், கொஞ்சமும் மனமிரக்கமின்றிக் கர்ப்பமா யிருக்கையில் ஒண்டியாக வனத்தில் விட்டு வரும்படி ஆஞ்ஞாபித்தார்.

இன்னும் அநேக ஆடவர்கள், பெண்களை ஏமாற்றி மோசஞ் செய்திருக்கின்றனர். ஆடவர்கள்தான் மனவுறுதியும், கன்னெஞ்சமு முடையவர்கள். தாரா, நான் கூறியது யாவும் உண்மைதான். ஆகாயவாணி கூறிய வாக்கும் பொய்க்காது, என்று வாய்விட்டுக் கூறினாள்.

ச—பெண்மணியே, உன் புத்திக் கூர்மையை நான் என்னவென்று கூறுவேன். நீ கூறிய மொழிகள் யாவும் மெய்தான். ஆனால் இப்பொழுது நீ கூறின வாக்கியத்தை நான் எப்படி நம்பலாம்.

மே—ஹே. ஆபத்பாந்தவா; அனாத ரக்ஷகா; தீனபந்து; தயாநிதி; கமலாகரா; கருணாநிதி; இதுவும் என் விதி தான். ஆகாயவாணியே நான் உண்மையில் இவரையே பர்த்தாவாக நினைப்பதையும், நீ கூறியது உண்மையாயிருந்தால், இவர் முன்னிலையில் என் வார்த்தை பொய்க்காமல், நீர் கூறவேண்டுமென்று கூறிக் கண்ணீருதிர்த்தாள். உடனே உரத்த தொனியுடன், **அடே! சந்திரா! மேனகாவின், மனமென்னும் புண்ணில், உன் கடுமை மொழிகளான கோலைவிட்டுச் சஞ்சலப் படுத்தாதே. நான் முன் கூறிய யாவும் உண்மையே; நீ அவளைக் காந்தர்வ மணம் முடித்து, இருவரும் அயல்நாடு சென்று விடுங்கள்** என்று ஆகாயவாணி கூற, அதைச் செவியுற்ற சந்திரன், உடல்பதைத்துக் கீழே விழுந்து நமஸ்கரித்து; ஆகாயவாணியே! நீர் மொழிவது சரிதான். மகாநந்த அரசன், காட்டகத்திலிருந்த என்னை அரண்மனைக்கு அழைத்து வந்து யாதொரு கவலையுமின்றி புத்திரனைப் போல் பாவிக்கின்றனர். நான் அவர் அறியாமல் அவருடைய மகளையே மணம் புரிந்து, அயல் நாடு சென்றுவிட்டால், **செய்ந்நன்றி மறந்த பாதகன்** என்று என்னை யாவரும் நிந்தனை செய்வார்களே. என் செய்குவேன், என்று பய பக்தியுடன் கூறி நின்றான்.

**ஆ.**—குழந்தாய், அதில் உனக்கு பாபம் சம்பவிக்காது. மிகவும் ஆபத்தான நிலைமையிலிருக்கும் மேனகாவைக் கைவிடாமல் காப்பது நின் கடமை யென்று கூறி நின்று விட்டது. பார்த்தான், சந்திரன். ஆஹா! என்ன காரியம் செய்தோம். பதி

வ்ரதா சிரோன்மணியான மேனகாவை இழிவாகக் கூறி விட்டோமே. என்ன அறிவின்மை என்று தனக்குத்தானே நொந்து கொண்டு மௌனமாய் நின்றான்.

மே—காதலா! இன்னும் என்ன யோஜனே, நீங்கள் என்னைக் கைவிடுவதானால் இப்பொழுதே என் உயிரை மாய்த்துக் கொள்ளுகிறேனென்று பகர்ந்து சந்திரனின் காலடியில் பணிந்தாள்.

ச—கண்மணியே, இனியும் உன்னை, நான் சோதனை செய்தல் தகுமா. முன் பின் பாராமல் உன்னை இகழ்ந்து கூறியதற்காக என் மனம் வாதைப்படுகின்றது, மன்னிக்கவேண்டும்.

மே—நாதா, இதுவும் ஓர் விளையாட்டுதானோ! அல்லது வேண்டுமென்று கூறுகின்றீரோ, என்று மறுபடியும் பணிய, உடனே சந்திரன், இவளை வாரியெடுத்துத் தழுவி, ஆலிங்கனம் செய்து மேனகா, என் உயிருள்ளவரையில் கடவுளறிய நான் உன்னைக் கைவிடுவதில்லை. உன் கவலையை விடு; உனக்கு நேர்ந்த ஆபத்து யாது? என்று வினவினான். இவர்களின் சந்திப்பைக்கண்ட தாராவதி, ஆநந்தவாரியில் மூழ்கிச் சற்று மறைவிடத்தில் சென்றனள்.

மே—நாயகா. என்னைச் சிறு வயதில் தனித்துவிட்டு என் தாய் பரலோகப்ராப்தியடைந்தனள். அதுமுதலின்று வரையில் என்னை தாராவதி தான் பராமரித்து வருகின்றாள். என் தந்தை புஷ்பாவதியை விவாகம் செய்யும் வரையில் என்னை மிகவும் அன்புடன் ஆதரித்து வந்தார். இப்பொழுது அவளுடைய மோகத்தில் மயங்கி என்னை நிராகரித்துத் தன் மைத்துனனை புஜங்கனை மணக்கும்படி என்னை வற்புறுத்துகின்றார். நாதா,

> கானமயிலாடக் கண்டிருந்த வான் கோழி
> தானுமதுவரகப் பாவித்துத்—தானுந்தன்
> பொல்லாச் சிறகை விரித்தாடினாற் போலுமே
> கல்லாதான் கற்ற கவி.

என்றபடி அரசகுமாரனாய் பிறந்துவிட்டால் போதுமா. உங்களுடைய குணத்தில் அரைக்கால்வாசி கூட அவனுக்குக் கிடையாது; அவனுடைய துர்ச்செயல்களை அளவிடவே முடியாது; அதெல்லாமிப்பொழுது என்னத்திற்கு.

ச—காதலுக்கினிய கண்ணாட்டியே. நல்லது, நேரமாகி விட்டது; நானிங்கு இருப்பதை எவராவது அறிந்துவிட்டால் மிகவும் கெடுதி நேரிடும். அதை நீ அறியாதவளல்ல. ஆதலால் நான் சென்று வருகிறேன், ப்ரியே.

மே—ஆம், வாஸ்தவம் தான். நாதா நான் இனி உங்களைப் பிரிந்து அரை நாழிகையிருப்பதும் எனக்குச் சகிக்காது. என் செய்குவேன்.

ச—மேனகா, நான் தினசரி இங்கு வந்து செல்லுகிறேன். விடை கொடுப்பாய், வேணியே!

மே—கணவரே, நாம் அயல் நாடு செல்வது என்றைக்கு?

ச—ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு என்பதுபோல், நாம் அவசரப்படக் கூடாது. இன்னும் கொஞ்சகால மிங்கிருந்து உன் தந்தையின் எண்ணத்தையும் நன்குயறிந்து, பிறகு செல்வோம்.

மே—காதலா, உங்களிஷ்டப்படியே நடக்கட்டும். நீங்கள் தினசரி இங்கு வராவிடில் என் உயிர் நிலைக்காது.

ச—கண்மணே, நான் கட்டாயம் வந்து போகின்றேன். நேரமாகிவிட்டதென்று கூறி, இருவரு மாலிங்கனம் செய்து ஆநந்தக் கண்ணீருதிர்த்துப் பிரியா விடை பெற்றுச் சென்றனர்.

சந்திரன் தனக்குக் கிடைக்கவரிதான பாக்கியத்தைப் பெற்றதை நினைத்துக் களிப்படைந்து, தன் விடுதிக்குச் சென்று சயனித்தான். ஆனால் நித்திரை பிடிக்கவில்லை. மேனகாவை நினைத்துக்கொண்டே புரண்டு கொடுத்துக் கொண்டிருந்தான். நினைவு ஒருபக்க மிருக்கையில், தூக்கம் என் வரும்? நடு நிசி வேளையாயிற்று. சந்திரன், ஆஹா! ஏன் நித்திரை வரவில்லை, என்று எழுந்து அங்கு மிகவும் ஜாஜ்வல்யமாய் ப்ரகாசித்துக் கொண்டிருந்த எலக்டிரிக் லைட்டை அணைத்து விட்டு மறுபடியும் மஞ்சத்தில் படுத்துக்கொண்டான். இவன் படுத்த சற்று நேரத்திற்கெல்லாம் அறையின் கதவை யாரோ தட்டுவதுபோல் சப்தம் கேட்டது. அதை உற்றுக் கவனித்த சந்திரன் அசட்டையாகயிருந்துவிட்டான். மறுபடியும உரத்துத் தட்டும் சப்தம் கேட்டது. உடனே நம் கதாநாயகன் எழுந்து விளக்குப் பித்தானை

அழுக்கி மறுபடியும் ப்ரகாசிக்கச் செய்துவிட்டு, யாரங்கே, என்று வினவ, வெளியிலிருந்து காதலா, என்னும் சப்தம் பிறந்தது. அதைச் செவியுற்ற சந்திரன் திடுக்கிட்டு, யாரது மேனகா இந்த மாதிரி நள்ளிரவில் வரப்பட்டவளல்லவே, இந்த அகாலத்தில் வந்தவர் யாரென்று தனக்குத்தானே கூறிச் சந்தேகங் கொண்டு கதவைத் திறந்துவிட்டான். திறந்ததும் ஒரு உருவம் உள் நுழைந்து மேலே போர்த்தியிருந்த சரிகைத்துப்பட்டாவை நீக்கிவிட்டது. பார்த்தான், பிரமித்தான். கோபமடைந்தான் சந்திரன். ஏனெனில் வந்த உருவம் புஷ்பாவதி.

பு—சந்திரா, உன்னைக்கண்டது முதல் என் உயிர் பரிதவிக்கின்றது. ஆதலால் இந்நள்ளிரவில் இங்கு வந்தேன். என்னை அன்புடன் ஆதரிக்கவேண்டும்.

ச—அம்மணி, வேண்டாம். வீணாக என்மேல் அன்பு பாராட்டி அவமானப்படவேண்டாம். வெளியில் சென்றுவிடுங்கள்.

பு—சந்திரனே, நீ என் மனதிற் புகுந்த சுந்திரன்! நீ என்ன கூறிய போதிலும் என் எண்ணம் ஈடேறும் வரையில் வெளியில் செல்லமாட்டேன்.

ச—உன்னுடைய எண்ணம் யாது?

பு—நீ என் ஆசை மணாளனாக இருக்கவேண்டுமென்றதும் சந்திரனுக்கு ரௌத்திரகாரமாய்க் கோபம் ஜனித்து ஹே, சண்டாளி; அடி துஷ்டையே; நீயும் ஓர் அரசனுக்குப் பிறந்து சக்ரவர்த்தியை மாலையிட்ட மனைவியா. நீயும் ஒரு பெண் ஜன்மமா; நீ மரியாதையுடன் சென்றுவிடுகிறாயா அல்லது அரசனை வரவழைக்கட்டுமா, என்று ஆவேசத்துடன் மொழிய உடனே புஷ்பா. சந்திரா, நீ அரசனை யழைத்தால் உன் மீதே பழி சுமத்தி உன் மானத்தை வாங்கி விடுவேன். அரசன் என் சொல்லை மீறமாட்டார். நீ என்னை வீணாக மிரட்டவேண்டாம். எனக்கு உடன்பட்டுவிடு என்று மொழிந்தாள்.

ச—புஷ்பாவதி! நீ இன்னும் என் முன்னிலையில் நிற்பதற்கு அரசனுடைய அன்பினால் நான் சும்மா இருக்கிறேன். எனக்கு நித்திரை வருகிறது, தயவுசெய்து வெளியில் சென்றுவிடு.

பு—நான் செல்ல முடியாது. எதுவரினும் வரட்டும்.

ச—அப்படியா, உன்னைப்போன்ற மானங்கெட்ட பெண் பிள்ளைகளும் இப்பூவுலகிலுண்டா. இதென்ன அநியாயம், எனக்கு அபகீர்த்தி வந்தபோதிலும் வரட்டும். எதற்கும் கடவுள் ஒருவர் உளர் என்று கூறிப் புஷ்பாவதியின் கரத்தைப் பிடித்திழுத்து வெளியே தள்ளிக் கதவைத் தாளிட்டுவிட்டான். புஷ்பாவதியும் அவமானமடைந்து வந்தவழி தெரியாமல் ஓடிவிட்டாள்.

நந்தவனத்தில் விட்டு வந்த நாரீமணிகளைச் சற்று கவனிப்போம். சந்திரன் சென்றதும் மேனகாவும், தாராவதியும் மிகவும் குதூகலங்கொண்டு தங்களரண்மனைக்குச் சென்று போஜனமுடித்து ஹம்சதூளிகா மஞ்சத்தில் மலரணையின் மீது சயனித்தனர். மேனகாவுக்கு நித்திரை வரவில்லை. அடி தோழி இன்றைக்கு ஏன் மிகவும் வெப்பமாயிருக்கிறது. அச்சந்திரன் சென்றதும் உண்மைச் சந்திரன்தான் சென்றுவிட்டானோ, இல்லையே, இதோ ஆகாயத்தில் நின்று வேடிக்கை பார்க்கின்றானே. என் நாதா. என் உள்ளத்தை அடியோடு கவர்ந்து சென்றுவிட்டீர்களே. மன்மதனுக்குச், சிவனால் எரிக்கப்பட்டும், இன்னும் திமிரடங்கவில்லையே. தன்னுடைய மலர்க்கணையை என் மீதே பூராகவும் ப்ரயோகம் செய்துவிட்டானே. ஸ்திரீகளின் விரக தாபத்தைத் தணிக்கத் தாய், தந்தை, சுற்றத்தார் எவர்களாலும் முடியாத செய்கை. உன்னைப் போலொத்த புருஷ சிகாமணியே அதற்கேற்றவன். தாராவதி, கொஞ்சம் சந்தனமாவது கொண்டுவா, என்று வாய்க்கு வந்தபடியெல்லாம் பிதற்றினாள். இவளுடைய அவஸ்தைகளை யறிந்த தாரா, உடனே கலவைச் சாந்தை எடுத்துப் பன்னீர்விட்டுக் கரைத்து மேனகாவின் மேனியில் மெல்லெனப் பூசிப் பட்டுவிசிறியினால் வீசினாள்.

மே—சகீ, பன்னீர் வென்னீரைப்போல் கொதிக்கின்றது. நீ வீசுவது அக்கினிக் காற்றடிக்கிறது. போதும் எனக்கோ நித்திரை பிடிக்கவில்லை; சற்று நேரம் வீணகானம் செய்யென உடனே தாராவதி வீசுவதை நிறுத்தி, வீணையைக் கையிலெடுத்து ஸ்ருதியைக் கூட்டித் தந்தியை மீட்டி, ராகத்தைக்

காட்டி ஆலாபரணம் செய்து பகவானின்மீது ஓர் பாட்டுப்பாடி முடித்து வீணையை வைத்துவிட்டு மேனகா! நீ ஏது இப்படிப் பொருமையை இழந்துவிட்டாய். நாளையதினமே உன் காதலனைக் காணலாம். தூங்காவிடில் உன்னுடைய மேனிக்குக்கெடுதிவந்து விடும் என்று கூற, மேனகாவும் வெட்கமடைந்து, தாரா! உண்மைதான்; அடடா, இந்நேரபரியந்தம் நீயும் எனக்காக விழித்திருந்தாயே, நான் மிகவும் முட்டாள். சயனித்துக் கொள், என் சகியே! என, தாராவும் சயனித்தாள். மேனகாவும் இரவை நொந்துகொண்டே துயிலிலாழ்ந்தாள். மறுதினம் காலை இருவருமெழுந்து ஸ்னானபானாதிகளை முடித்து மாலைப் பொழுதின் வரவை எதிர்பார்த்திருந்து, அஸ்தமன மானவுடன் சந்திரனுக்கு வேண்டியஅளவு பலகாரவகைகளும், கனிவர்க்கங்களும், தங்க தாம்பாளத்திலெடுத்துக்கொண்டு வனத்து ஊஞ்சலில் வந்தமர்ந்தனர். சற்று நேரத்திற் கெல்லாம், சந்திரன் கவலையொருபுறம் நெருக்க, மேனகாவைக் காணும் ஆநந்தம் ஒருபுறம் பொங்கியெழ, மெல்லன உல்லாசமாய் நடந்து வந்தான். சந்திரனைக் கண்ட மேனகா சாகரம்போல் பொங்கிக் களிப்படைந்து, எதிர் சென்றழைத்து வந்து, தான் கொணர்ந்தவைகளை அருந்தும்படி உபசரித்து, இருவரும் ஊஞ்சலிலமர்ந்து, வேடிக்கை மொழிகளைப் பேசி விளையாடினர். இரவு நடந்த சமாசாரங்களைச் சந்திரன் மேனகாவிடம் கூறவில்லை. இவர்கள் உரையாடிக் கொண்டிருக்கையில், இருள் கொஞ்சமும் இரக்கமின்றி வந்து மூடிக் கொண்டமையால் இருவரும் வருத்தத்துடன் விடைபெற்றுத் தங்களுடைய இருப்பிடம் சென்றனர். இவ்வாறு சில நாள் சென்றுகொண்டிருக்கையில் ஒரு நாள் மேனகாவும் சந்திரனும் ஊஞ்சலில் உல்லாசமாக ஆடுவதைப் புஷ்பாவதி தன் உப்பரிகையின் மீதிருந்து கண்டுவிட்டாள். உடனே அவளுக்கு அடிவயிற்றில் இடி விழுந்தாற் போலாயிற்று. உடனே மேனகாவின் மீது அவளுடைய எண்ணங்கள் யாவும் சென்றன. ஆஹா இந்தச் சிறுக்கியல்லவோ சந்திரனை மயக்கிவிட்டாள்; இருக்கட்டும், சந்திரனைக் கொன்றுவிட்டால் என்னுடைய கோரிக்கை ஈடேறாமல்

போய்விடும். மேனகாவைத் துலைத்துவிட்டு மறுவேலை பார்ப்பேனென்று கூறிப் பற்களை நறநறவென்று கடித்துக் கண்களில் கோபத்தணல் வீச, ஒரு தாதியை அழைத்துச் சந்திரன் வருகையில், அவனைக் கைப்பிடியாக கொண்டுவரும்படியாகக் கட்டளையிட, அவளும் சந்திரன் வரும்வரையில் காத்திருந்து, வந்ததும் கட்டளையின்படிப் புஷ்பாவின் எதிரில் அழைத்துவந்துவிட்டுச் சென்றனள். புஷ்பாவதி அஹங்காரத்துடன் சந்திரனை ஏற இறங்க நோக்கிச்சந்திரா, உன்னுடைய மோசத்தை யெல்லாம் நான் அறிந்துவிட்டேன். அந்தத் தடிச்சியல்லவோ உன்னைத் தன்னுடைய வலையில் சிக்கிவைத்துவிட்டாள். அவளை இன்னும் ஒரு வாரத்திற்குள் யமனுலகிற்கு அனுப்பாவிடில் நானும் மோகினிபுரியின் அரசியல்ல. இனியாகிலும் என்னுடைய நினைவை ஈடேற்று. என்னைவிட அவளெந்த விதத்தில் உயர்ந்தவள் என்று சடசடவென்று மழை பொழிவதுபோல் சரமாரியாகத் தொடுத்தனள். மேனகாவின் நேசத்தை அறிந்துவிட்டாளென்பதைக் கண்ட சந்திரன் மனத்திற்குள் நடுநடுங்கி நீ என்னை யழைத்த விவரம் யாது? எனக்கு நிற்க நேரமில்லையென விடை பகர்ந்தான்.

பு —இனி நீ என்னுடைய கட்டளையின் படிதான் நடக்க வேண்டும். அந்த அற்பநாயின் நேசத்தை விட்டுவிடு. நான் அவளைத் துலைத்துவிடுகிறேன். அவளை நேசிக்காதே. வேண்டாம். விட்டுவிடு.

ச.— அப்படியா! இதற்காகவா என்னை வரவழைத்தாய். நீ என்ன வேண்டுமாகிலும் செய்துகொள். உன்னுடைய பிரியப்படி நடக்க என்னால் இயலாது என்று கூறிவிட்டு வேகமாய் நடந்து தன்னுடைய அறைக்குள் வந்து என்னே இப்பெண் மணியின் துர் எண்ணம்? தலைக்குமேல் வெள்ளம் ஓடி விட்டது. இனியும் நாம் மேனகாவைக் காப்பாற்றா விடில் அவள் கதி அதோகதிதான். இந்த இக்கட்டிலிருந்து தப்புவிக்க வேண்டுமென எண்ணி ஓர் கடிதம் வரைந்து தன்னுடைய மேஜையின் மீது வைத்து விட்டுச் சற்று இருள் வந்ததும், மேனகாவின் அரண்மனையை யடைந்து தாரவதியைத் தனித்து எப்படி

அழைப்பதென்று மயங்கித் தயங்கி நின்றான். அச் சமயம் தற்செயலாய் தாரா வெளியில் சென்றனள். சந்திரன் அவளைப் பின்றுடர்ந்து தாரா, என்று கூப்பிட, உடனே தாரா திரும்பிச் சந்திரனைக் கண்டு வந்தனம் செய்து ப்ரபூ. இரவில் இவ்விடம் வந்ததை நோக்க, ஏதோ விசேஷ முளது போல் தோன்கின்றது என்றாள்.

ச.—தாரா. ஆம். கும்பிடபோன தெய்வம் குறுக்கே வந்தது போல், நான் உன்னை நேரில் சந்திக்க நேரிட்டது. நீ எவ்விடம் செல்கின்றாய்.

தா.—நான் நந்தவன வாயிலின் கதவை மூட மறந்துவிட்டேன். அதற்காக போகிறேன்.

ச.—அப்படியா. நீ மறந்தது எனக்கு மிகவும் அனுகூலமாயிற்று. நான் அந்தப் பாதையாகத் தானிவ்விடம் வந்தேன். நீ மேனகாவின் உயிர்த் தோழியானதால் உன்னிடம் சில சமாசாரங்கள் கூற வேண்டி வந்தேன்.

தா.—என்ன சங்கதியோ?

ச.—அஃதியாதெனில், நீ இரட்டைக் குழல் துப்பாக்கியிலெப்போதும் தோட்டாக்கள் நிறைத்து, அதிக பதிவுடன் உன் மடியில் வைத்திருக்கவேண்டும். மேனகாவினுடைய உயிருக்குப் புஷ்பாவதி யமனாகத் தோன்றியிருக்கிறாள். நான் கூடிய சீக்கிரம் மேனகாவை வெளிநாட்டிற்கு அழைத்துச் சென்றுவிடுகிறேன். அதுவரையில் உன்னுடைய பாதுகாப்பினால்தான் அவளுடைய உயிர் நிலைக்கவேண்டும். இவைகளை யெல்லாம் மேனகா அறிந்தால் திகிலடைந்து விடுவாள். அவளறியாமல் நடக்கவேண்டும். உன்னுடைய விருப்பம் யாது?

தா.—ப்ரபுவே! தங்களுடைய கட்டளையின்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன். மேனகாவின் விஷயமாக என் உயிரையும் விடத்தயாராயிருக்கிறேன். அவளை என் திருக்கண்களைப்போல் பாவித்துப் பாதுகாப்பேன். தாங்கள் கொஞ்சமும் என் மீது சந்தேகங்கொள்ளவேண்டாம். புஷ்பாவதியின் எண்ணங்களை நீங்கள் எப்படி யறிந்தீர்கள். அதை என்னிடம் கூறலாமாகில் கூறலாம். இல்லையேல் அவசியமில்லை.

ச.—தாரா, உன்னிடமுரைக்க யாதொரு தடையுமில்லை யென பகர்ந்து, நடந்த வரலாறுகள் யாவற்றையும் சவிஸ்தாரமாய்க் கூறினன். அதைச் செவியுற்ற தாரா, திகில்கொண்டுப் பிரமித்து, அடிசண்டாளி! அவள் கொலைக்கும் அஞ்சாத கொடும்பாவி. மகாராஜ், இனி தங்களுடைய உயிருக்கும் தீங்கிழைப்பாள். அதனல் நீவிர் சீக்கிரம் மேனகாவை யிட்டுக் கொண்டு, அயல்நாடு சென்றுவிட வேண்டுமெனச் சந்திரனும் ஆஹா இன்னும் மேல்நடக்கும் காரியங்களைக் கொஞ்சம் வேடிக்கைப் பார்த்துவிட்டுப் போகலாமென நினைக்கிறேன்; தாரா வெகு நேரமாகிவிட்டது. நான் போய்வருகிறேன்; மேனகாவைக் காப்பதில் நீ தான் அதிக உஷாராயிருக்கவேண்டுமெனக் கூறித் தன்னுடைய விடுதிக்கே மறுபடியும் சென்றுவிட்டான்.

தாராவும் கதவைத் தாளிட்டுச்சென்று சந்திரனின் ஆஞ்ஞைப்படி, மேனகா அறியாமல் தான்மாத்திரம் கண் விழித்திருந்தாள். அன்றிரவு யாதொரு கெடுதியும் நேரிடவில்லை. மறுதினம் மாலை, மாமூல் பிரகாரம், மேனகாவும் சந்திரனும், வார்த்தையாடி, விடைபெற்று அரண்மனையை நாடிவரும் சமயத்தில், புஷ்பாவதி எதிர்ப்பட்டனள். உடனே நேசர்களிருவரும்வணங்கி மௌனம் சாதித்தனர். புஷ்பாவதி தாராவை நோக்கி, தாராவதி, நீ உன்னுடைய இருப்பிடம் செல்வாய். நான் என் குழந்தை மதலையான மேனகாவுடன் சற்றுநேரம் உரையாட வேண்டுமென்று அதிகாரத் தொனியுடன் கூற, தாரா, அப்படியே அம்மணி என்று அரண்மனைக்குச் செல்பவள் போல் சென்று, மறுவழியாக இவர்களிருக்கும் மரத்தின்டியில் வந்து மறைந்து நின்று புஷ்பாபதியைக் கவனித்தபடியே இருந்தனள்.

தாராவதி போய்விட்டனளென்று நினைத்த புஷ்பாவதி, அடிமேனகா, நீ என் சகோதரனை மணம்புரிய இஷ்டமில்லையென்றுகூறி ஆண்டிப்பயலான சந்திரனிடம சோரம்போவது எனக்குத் தெரியவராதென்று நினைத்தாயா? என்ன கூறுகின்றுயென்று அதட்டினுள். அதைச் செவியுற்ற மேனகா இடிவிழுந்த நாகம்போல் நடுநடுங்கி அம்மா, நான் யாதொரு தப்பிதமும் செய்யவில்லையே! யென்று பயத்துடன் மொழிந்தாள்.

பு.—அடி நீலி என்ன ஸாகஸம் செய்கிறாய். இனி உன்னுடைய உயிர் என்னுடைய கையில்தானிருக்கிறது. உன் பசப்பு வார்த்தையெல்லாம் என்னிடம் செல்லாது. புஜங்கனைக் காதலிப்பேனென்று ஒரு வார்த்தை கூறிவிட்டாயானால் உனதுயிர் தப்பும். இல்லையேல் இப்பொழுதே யமனுலகு போய்விடும். என்ன சொல்லுகிறாய்; பத்திரம்.

மே.—சிற்றன்னாய் என் தலை எழுத்தின்படியே யாவும் நிறைவேறும். நான் ஒருக்காலும் புஜங்கனை மணக்கமாட்டேன்.

பு.—அடி, நாரி. இப்பொழுதாவது என்னுடைய சாமர்த்தியத்தைக் கண்டாயா. நீ என்ன கூச்சலிட்டாலும் இங்கு எவரும் வரமாட்டார்கள். தாராவதியையும் தந்திரமாய் அனுப்பிவிட்டேன். என்ன பதில் கூறுவாயென, மேனகா, ஒன்றுமே பதில் கூறவில்லை. புஷ்பா தான் மறைவாக வைத்திருந்த கொலையாளிகள் இருவர்களையும் நோக்கி சரி, நடக்கட்டும் வேலையென்று கட்டளையிட இருவரும் இளவரசியின் அருகில் நெருங்கி வந்து அம்மணி உனக்கு உயிருட னிருக்க விருப்பமில்லையா என்று மொழிய அதற்கும் மேனகா மறுமொழி புகலவில்லை. புஷ்பாவதிக்கு காலாக்கினிபோன்று கோபம் உதித்து அவள் எதற்கும் இணங்கமாட்டாள்; உங்கள் தொழிலை நிறைவேற்றி விடுங்களென, ஆட்களிருவரும் கட்கத்தை ஓங்கி மேனகாவை வெட்ட வந்தனர். யாவற்றையும் விடாமல் கவனித்து மறைவிலிருந்த தாராவதி, இனி தாமதித்தால் மோசம் நேரிடுமென நினைத்துத் துப்பாக்கியைக் கொலையாளிகளின் மீது குறிபார்த்து ப்ரயோகித்தாள். இருவரும் உடனே அடியற்ற மரம்போல் கீழே சாய்ந்துவிட, இவைகளைக் கண்ட புஷ்பாவதி, மனதில் மிகவும் அச்சங்கொண்டு, எவரோ தன்னுடைய சூழ்ச்சியை யறிந்தனரென்று பயந்து ஒரு நிமிஷங்கூட அங்கு நில்லாமல் ஓடிவிட்டாள். அவள் சென்றதும் தாராவதி ஒரே பாய்ச்சலாக வந்து மேனகாவை இறுகத் தழுவி என் கண்மணியே, நீ இன்று மறுஜன்ம மெடுத்தாய் என்று மேலே ஒன்றும் கூறத்தோன்றாமல் கண்ணீருதிர்த்தாள்.

மே.—என் உயிரைக்கொடுத்த என் தாயே; நான் உனக்கு

என்ன கைம்மாறு செய்யப்போகிறேன். நீ இந்தச் சமயத்தில் துப்பாக்கியுடன் இங்கு எப்படி வந்தாய் ?

தா.—அதெல்லாம் பிறகு சொல்லுவேன். நீ பயத்தினுல் மிகவும் அரண்டிருக்கிறுய். நாம் செல்வோம் வா என, இருவரும், தங்களிருப்பிடம் சேர்ந்து, மேனகா களைப்படையாமல் அவளுக்கு வேண்டிய உணவுகளளித்து நித்திரைசெய்யும்படி தாராவதி கூறினள். மேனகாவும் பயத்தினுல் பீதியடைந்து உடம்பு நிரம்பக் களைப்பாயிருந்ததால் தாராவின் சொல்லை மறுக்காமல் நித்திரை போயினள். சற்று நேரத்திற்கெல்லாம் தாராவதி அறைகளையெல்லாம் நன்ருய்ச் சோதனை செய்துவிட்டுக் கதவுகளையெல்லாம் பூட்டிக்கொண்டு, வேகமாய் நடந்து சந்திரனுடைய விடுதியை நாடிச்சென்று, நடந்த சங்கதிகள் யாவற்றையும் உரைத்து விசனப்பட்டாள். அதைச் செவியுற்ற சந்திரனும் துக்கமடைந்து, ஆஹா இனிமேல் கொஞ்சமும் தாமதிக்கக்கூடாது. தாராவதி, நீங்கள் நாளையதினம் மாலை நந்தவனம் வரவேண்டாம். நீ இரண்டு அஸ்வங்களைச் சவாரிக்குச் சரியான ஏற்பாட்டுடன் தயார்ப்படுத்தி வை. நான் நாளையதினம் இரவு மேனகாவையழைத்துக்கொண்டு வேறுதேசம் சென்றுவிடுகிறேன். அதுவரை, நீ சரியான பாதுகாப்புடன் இருக்கவேண்டுமென்று மொழிந்தான்.

தா.—ப்ரபூ! தாங்கள் கூறுவது மிகவும் விந்தையாக விருக்கின்றதே. நான் மேனகாவைப் பிரிந்து அரை நிமிஷமும் உயிர் தரியேன். ஆதலால் தயவுசெய்து என்னையும் உங்களுடன் அழைத்துச் செல்லவேண்டுமாய் ப்ரார்த்திக்கிறேன்.

ச.—தோழியே, நீ புகலும் மொழியாவும் உண்மை. ஆனல் நாம் மூவரும் சேர்ந்து சென்றுவிட்டால் மேனகாவுக்கு ஓர் அபக்யாதி நேரிடும். அதற்காக நீ இன்னும் நான்கு நாட்களிருந்து நடந்த சங்கதிகள் யாவற்றையும் அரசனிடம் தனித்து அவன் புத்தியில் படும்படி கூறிவிட்டுப் பிறகு காட்டகத்திற்கு வந்துவிட்டால் எங்களைக்கண்டு கொள்ளலாம். என்னுடைய சொல்லை மறுக்காமல் இந்தப் பேருதவியைச் செய்யவேண்டும்.

தா.—நல்லது. தாங்கள் மொழிவதும் நியாயந்தான். தங்

கள் கட்டளையின்படி அரசனிடம் கூறிவிட்டு அரைநிமிஷமு மிங்கு நிற்காமல் உங்களிருப்பிடம் தேடிவந்து சேருவேன்.

ச.—அப்படியே செய். இதோ, இந்தக் கடிதத்தையுமரச னிடம் ஈந்துவிடுவாய்; மறக்காமல் இரகசியமாய் எவருமறியாமல் இரண்டு குதிரைகள் கட்டாயம் ஆயத்தப்படுத்தி வைப்பாய்.

தா.—ஆஹா. நமஸ்காரம். நான் சென்றுவருகிறேன்.

என்று விடைபெற்றுக் கடிதத்தையு மெடுத்துக்கொண்டு மேனகாவி னறைக்கு வந்தாள். தாராவதி போய்வந்த சங்கதி கள் ஒன்றும் தெரியாமல் மேனகா ஆழ்ந்த நித்திரையிலிருந்த னள். தாராவும் அதிக ஜாக்கிரதையுடன் கதவுகளை யெல்லாம் மூடிக்கொண்டு துயிலிலாழ்ந்தனள். மறுதினம் கதிரவன் தன் செங்கதிர்களைப் பரப்பி மிகவும் பிரகாசமாக எழுந்து தன்னு டைய கியாதியான வெளிச்சத்தை உலக முழுவதும் வெளிவிட் டான். அதையறிந்த தோழிகளிருவரும் படுக்கையை விட்டெ ழுந்திருந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு போஜன மருந்தி சம்பாஷித்துக்கொண்டிருந்தனர். மேனகாவைப் பிரி யப்போகும் வருத்தம் தாராவதியை மனதிற்குள் மிகவும் வாட் டிக்கொண்டிருந்தது. மாலைப் பொழுதானதும் மேனகா, தன் சகியை நந்தவனம் செல்ல அழைக்க, மேனகா அங்கு இன்றைய தினம் செல்லவேண்டாம்; நேற்று நடந்த காரியங்கள் இன்னும் என் மனதை வாட்டுகின்றன. நீயும் அந்த இடத்தைக் கண்டால் திகிலடைவாயென்று மறுமொழி பகர்ந்தனள் தாராவதி.

மே—தாரா. என் காதலர் அங்குவந்து காத்திருப்பாரே. என் செயலாம்.

தா.—மேனகா, உன்னிடம் ஒரு வார்த்தைக் கூற மறதி யடைந்தேன் மன்னிக்கவேண்டும்.

மே.—என்ன சமாசாரம். தடையின்றிப் பகர்வாய்.

தா.—இன்றிரவு உன் நாயகன் உன்னையழைத்துக்கொண்டு செல்லப்போகிறார். ஆனால் சில காரணார்த்தமாய் நான் வர முடியவில்லை.

மே.—சகி ! அப்படியா? என்நாதன் உன்னிடம் கூறினரா. எனக்கு நற்காலம் கிட்டிவிட்டது. நீ ஏன் என்னை விட்டுப்பிரிய

வேண்டுமென்று வினவ, தாராவதியும், நடந்த சமாசாரங்கள் யாவற்றையும் கூறித்தான் வரக்கூடாத காரணத்தையும் உரைத்தாள்.

மே—என் ப்ரியே! தாயே!! தாராவதி!!! என்னுடைய உயிரையும் காப்பாற்றி, எனக்குவரும் அபகீர்த்தியையும் தடுத்து, என் மானத்தை ரக்ஷிக்கும் உனக்கு நான் எவ்விதத்தில் பதிலுதவி செய்வேன்! நாம் முன் ஜன்மத்தில் சகோதரிகளாய்ப் பிறந்திருப்போம். இந்த ஜன்மத்தில் மாறிப்பிறந்தபோதிலும் சகோதரிகளைவிடப் பதின்மடங்கு அன்புட னிருக்கின்றோம். இன்றையதினம் என் பிரயாணம் நிச்சயமா? அல்லது என் மனதை அறிவதற்காகக் கூறினாயா?

தா.—என் கண்மணியே உன்னிடம் பொய்மொழியுரைப் பேனா! இன்னும் சற்று நேரத்தில் உன்நாதன் வந்து விடுவார். அதற்குள் உனக்கு வேண்டிய பணங்களும், பலகாரங்களும் எடுத்துவை.

மே.—எனதின்புறும் சகியே! தாரா!! எனக்கு வேண்டியவைகளெல்லாம், இதோ, நீ தயாராய் சித்தப்படுத்தியிருக்கின்றாயே. இவைகளெல்லாம் எதற்காகவோ என்று நான் கேட்காமலிருந்தேன். இப்பொழுது உண்மை விளங்கிற்று.

தா.—நல்லது. மேனகா, நீ எழுந்து கொஞ்சம் போஜனம் உட்கொள். நேரமாகிவிட்டது.

மே.—ஆகட்டும். என்காதலர், கால்நடையாகச் செல்வது. என் மனத்திற்கு விரோத முண்டாகும்; ஆதலால் இரண்டு குதிரைகள் வேண்டாமா?

தா.—இதோ நம் வனத்தில் நல்ல உயர் ஜாதிப் புரவிகள் இரண்டு ப்ரயாண முஸ்திப்புடன் நிற்கின்றன. கவலைகொள்ள வேண்டாம்.

மே.— ஆஹா உன் முன்யோஜனையும் புத்திகூர்மையும் எவருக்குவரும்; என் பாக்கியவசத்தினால் எனதன்னை என்னை உன்னிடமளித்தனள். என் தாயிப்போழுது அரசியாகவிருந்தால் எனக்கு இம்மாதிரி கொடுமைகள் நேரிடுமாவென்று கூறித் தன் நேத்திரங்களில் கண்ணீரைச் சோரவிட்டனள். அதைக்கண்ட

தாராவதியும் வருத்தமடைந்து, மேனகா என் வீணாக வருத்தப் படுகின்றாய். வேண்டாம். இதை நின் கண்வனறிந்தால் மிக வும் துயரமடைவார். சாப்பிட எழுந்திரு என்று கூற, மேன காவும் எழுந்து போஜனமுண்டு பிரயாண உடைகள் தரித்து, வேண்டிய சாமான்களை ஆயத்தப்படுத்திவிட்டுத் தோழிகளிரு வரும் மிகவும் அன்புடன் உரையாடிக்கொண்டிருந்தனர். அச் சமயத்தில் தெருவில் கதவைத் தட்டும் சப்தம்கேட்டு தாரா எழுந்து ஓடிக் கபாடத்தை நீக்கிச் சந்திரனைக் கண்டு ஆனந்தங் கொண்டு உள்ளே யழைத்துவந்தனள். நம் இளவரசியும் சட் டென்றெழுந்து தன் நாயகனைப் பணிந்து ஒன்றும் பேச நாவெ ழாமல் நின்றாள்.

ச.—கண்மணி! காதலியே! சீமாட்டி! மேனகா! நீ என்னு டன் வருவதற்குப் பிரியப்படுகிறாயா?

மே.—நாதா! அதற்கும் தடையுண்டோ?

ச.—ப்ரியே! நீ உப்பரிகையின்மீது தாதிகளின் அனுசரணை யில் உல்லாசமாக உலாவிவந்தவள். ஆதலால், நீ இப்பொழுது கானகத்தில் கற்கள்மீதும், முட்கள் பாறைகள்மீதும் சஞ்சரிப்ப தென்றால் மிகவும் கடினமன்றோ. அதற்காகதான் யோஜனை செய்கிறேன். உன் பிரிய மெப்படியோ?

மே.—நாதா! என் ப்ரபுவே!! தாங்களிருக்கும் இடம்தான் எனக்கு அரண்மனை. இனி எனக்குத் தங்கள் பாதாரவிந் தத்தைத் தவிர செல்வமும், ஆடையாபரணமும் உயர்ந்ததல்ல. இதோ நான் வரச் சித்தமாகக் காத்திருக்கிறேன்.

ச.—நல்லது. உன்னுடைய காதலின் பெருமையையும், கற்பின் மகிமையையும் நான் என்னவென்று கூறுவேன். தாரா வதி! நாங்கள் போய்வருகிறோம். உத்தரமளிப்பாய் உத்தமியே.

தா.—அப்படியே; சுகமாய் போய்வாருங்கள். நானும் சீக் கிரம் வருகிறேன்.

மே.—என்தாயே! தாரா! எனக்கும் விடைகொடுப்பாய்.

தா.—என் கண்மணி! மேனகா!! உன்னுடைய மிருதுவான தேகம் கானகத்திலலைய நான்மாத்திர மிங்கிருப்பது தகுமோ.

நானும் சீக்கிரத்தில் வந்து உங்களைக் கண்டுகொள்வேன் என்று கூறி மேனகாவை இருகத் தழுவியணைத்துக் **கன்றைப் பிரிந்த ஆவைப்போல்** ஆற்றொணாத் துயரமடைந்து அனுமதி யீந்தனள். மேனகாவும் தாராவதிக்குவேண்டிய ஆறுதல்களும் புத்திமதியும் கூறிவிட்டுக் குதிரைகளின்மீது ஆரோகணித்துக் கானகத்தை நோக்கிப் புறப்பட்டனர். என்னே இறைவனருள் எங்கும் அந்தகாரமான இருள் சூழ்ந்திருந்தமையாலும் இவர்களும் புரவிகளை வெருட்டாமல் மெதுவாய் நடத்தினதனாலும், தம்பதிகள் வெளிச்செல்வதைக் காவற்காரர்களும், மற்றுமுள்ள நகரஜனங்களும் அறிய முடியவில்லை. கஷ்டத்தைஅனுபவிக்கும் காதலர்களிருவரும் மோகினிபுரியின் கோட்டைவாயிலைக் கிட்டி, அதையும் மெதுவாய்ப் பயத்துடன்கடந்து அஸ்வங்களைத் தட்டிக் கொடுத்து வேகமாய்ச் செலுத்தி ஆரண்யமடைந்தனர். இரவும் வெகு நாழிகையாகிவிட்டது. குதிரைகளும் போகும்வழியை அறியமாட்டாமல் தயங்கின. சந்திரன் இவைகளை யறிந்து தங்கள் நாட்டைவிட்டுக் காட்டை யடைந்துவிட்டதனால் அச்சமின்றி இருவரும் பேசி ஒரு மனத்தினராய்க் குதிரைகளைவிட்டுக் கீழிறங்கி ஓர் மரத்தில் இரு அஸ்வங்களையும் கட்டிவிட்டு மற்றோர் விருக்ஷத்தினடியில் ஒரு துணியை விரித்து இருவரும் சயனிக்க மேனகா ! பஞ்சணையில் சயனித்த உன்மெல்லிய சரீரம் காட்டகத்திலுள்ள கற்களின்மீது படுக்கவும் விதியோ. இதுவும் நான் செய்த தீவினையோவென்று சந்திரன் ப்ரலாபித்து விசனித்தான்.

மே.—நாதா ! அசரீரி கூறினதுபோல் நாம் **சுகதுக்கங்கள் இரண்டையும் சமமாகப் பாவிக்கவேண்டும்.** அப்பொழுது என்னைப் பஞ்சணையில் துயிலவைத்த தேவனே, இப்பொழுதிக் கானகத்தின் புல்தரையில் படுக்க விதித்தான். எல்லாம் வல்ல இறைவனான கடவுளின் திருவிளையாடலல்லவோ இது. இதைப் பற்றி தாங்கள் கொஞ்சமும் கவலைப்படவேண்டாம். எதுவும் விதியின்படிதான் நடக்குமென்று கூற இருவரும் மிருகங்களின் பயங்கரமான கூச்சலினாலும், கூற்றுவன்போன்ற இருளின் வலிமையாலும் பீதியடைந்து நித்திரை பிடிக்காமலிருந்து பொழுது புலரும் சமயத்தில் சற்றுநேரம் அயர்ந்து துயிலிலாழ்ந்துவிட்டனர்.

---

## 4-ம் அத்தியாயம்.

இச்சம்பவங்கள் இம்மட்டும் நிற்க, புஷ்பாபதி தன்னுடைய செய்கையை எவர்களோ அறிந்துவிட்டார்களே யென்று திகிலடைந்து, சந்திரனுடைய விடுதிக்கும், மேனகாவின் அறைக்கும் இருதூதுவர்களை யனுப்பி அவர்களின் செய்கையையும், என்ன உரையாடுகின்றனரென்பதையும் பதுங்கி இருந்து பார்த்து வரும்படியாக ஆஞ்ஞாபிக்க, அவர்களிருவரும் அவளுடைய கட்டளையைச் சிரசின்மீது வகித்துத் தாங்கள் தேடிவரவேண்டிய ஜாகையை நாடிச் சென்றனர். ஆனாலிருவரும் ஒரு மணி காலத்திற்குள்ளாக திரும்பி வந்துவிட்டனர். அவர்களைக்கண்ட புஷ்பாவதி ஆச்சரியமடைந்து என்னடா! இவ்வளவு சீக்கிரமாக வந்துவிட்டீர்களென்று வினவினாள். உடனே சந்திரனைக் காணச் சென்ற காவலன் அம்மணீ! நான்சென்று அவருடைய அறையை நோக்கினதில் அது காலியாக விருந்தது. மறுபடியும் நாலாபக்கமும் ஆராய்ந்து நோக்கினேன். அங்கு மனிதரிருக்கும் அரவமேயில்லை. நான் அங்கிருந்த காவலனைக் கேட்டதில் அவன் சந்திரனைக் காணவில்லையென்றும், அதிகாலையிலேயே கதவு திறந்திருந்ததென்றும் பதிலளித்தான். நான் அதைக்கேட்டு சீக்கிரமாய்த் திரும்பிவிட்டேன் என்றான். புஷ்பா உடனே மேனகாவினறைக்குச் சென்ற தூதனை நோக்கி உன் விஷயமென்ன என்று வினவ,

தூ.—அரசியே! நான் மேனகாவின் அறைக்குச் சென்றேன். அங்கு அவளில்லை. தாராவதிமாத்திரம் அழுதகண்ணும், சிந்திய மூக்குமாகத் தனியாக வீற்றிருந்தனள். நான் அவளை நோக்கி, ஏனம்மா! விசனப்படுகிறாய். நம் இளவரசி யெங்கே யென்றுகேட்டேன். அதற்கவள், மேனகா எங்கு சென்றுவிட்டாளோ, எங்கு தேடியும் அவளைக் காணவில்லையே என்று தேம்பித் தேம்பி அழுதாள். நானும் அழுபவள்போல் பாவனைசெய்து எழுந்து வந்துவிட்டேன். இதுதான் சமாசாரமென்றுகூற,

அதைச் செவியுற்ற புஷ்பாவதி ப்ரமித்து, ஆச்சரியமடைந்து ஓகோ! சரிதான். இருவரும்சேர்ந்து ஓடிவிட்டனர்போல் தோன்றுகிறது. நமக்கு நல்லகாலந்தான். நாம் செய்த வஞ்சகம் வெளிவராது என்று களிப்படைந்து ஓடோடியும் அரசனிடம்சென்றுவணங்கி, நாதா! நம் அரண்மனையில் நடந்த ஆச்சரியத்தைக் கேள்விப்பட்டீர்களோவென்று ஆத்திரத்துடன் கேட்டாள்.

அ.— புஷ்பா! என்ன நடந்தது, கூறுவாய்.

பு.—நம் மேனகா, அரண்மனையில் வயிறு வளர்க்கவந்த ஆண்டிப் பையலுடன் கூட ஓடிவிட்டனள்.

அ.—ஆ! என்ன என்ன ஆச்சரியம்! நீ உரைப்பது கனவோ அல்லது உண்மையோ, வந்த பயல் யார்?

பு.—எல்லாம் நீங்களழைத்துவந்த சந்திரன்தான்.

அ.—என்ன! என்ன கூறினாய்! சந்திரனா! அவனைப்போன்ற நல்லகுணமுடையவனும், யோக்கியவானும் இவ்வுலகத்திலேயே கிடையாதே, இப்படிச் செய்வானோ.

பு.—நல்லவன்தான்! மகளைத்தான் அழைத்துச் சென்றுவிட்டான்!!

அ.—கோபமும், வியப்பு மடைந்து சட்டென்றெழுந்து மேனகாவின் அரண்மனை யடைந்து தாராவதியைக் கண்டு என் மேனகா எங்கே என்று துக்கத்துடன் கேட்டான்.

தா.—வேந்தே, நான்கூறுவதைச் சற்று செவியுற்று கேட்க வேண்டும். அப்படியில்லாவிடில் நான்கூறுவதில் யாதொரு பயனுமில்லை.

அ.—நன்றாய் கவனிக்கிறேன். கூறுவாய். என் குழந்தை எங்கு சென்றுவிட்டாள். எப்பொழுது சென்றாளென்று கண்களில் நீர்ததும்பக் கேட்டு அங்கு இடப்பட்ட ஆசனத்திலமர்ந்தான்.

தா.—(தைரியத்துடன்) அரசே, தாங்கள் புஷ்பாவதியின் மீதிருந்த மோகத்தினால் நம்மேனகாவை ஏறெடுத்தும் பார்க்காமலிருந்தீர்கள். மேனகாவுக்கு புஜங்கனை மணம்புரிய இஷ்டமில்லை. புஷ்பா, அவனை மணம் செய்யும்பொருட்டு மேனகாவை

ஹிம்சை செய்துவந்தாள். அதற்குமவள் இணங்காததனால் அவ ளைக் கொன்றுவிட யோஜனை செய்து, இருகொலையாளியுடன் மேனகாவின் உயிரைக் கைப்பற்ற ஏற்பாடுகள்செய்த சமயத்தில் அந்தக் கொடுங்கொலையை அகஸ்மாத்தாய்க் கண்ட சந்திரன், இரு எமதூதர்போன்ற ஆட்களையும், துப்பாக்கியினால் சுட்டு அவர்களை மேனகா போகவிருந்த இடமான யமபுரிக்கு அனுப்பி விட்டார். உடனே புஷ்பாவதியும் ஓடிவிட்டனள். மறுதினம் மேனகாவின் உயிரைதப்பவைக்க எண்ணி, அவளையுமழைத்துக் கொண்டு எவ்விடமோ சென்றுவிட்டார். அவர் சென்றபொழுது உங்களிடம் நடந்த சங்கதிகள் யாவற்றையும் கூறும்படி கட்டளை யிட்டு, இக்கடிதத்தையு மளிக்கும்படி கூறினாரென்று சந்திரன ளித்துச் சென்ற கடிதத்தை அரசனிடம் ஈந்தாள்.

இவைகளை யெல்லாம் நன்றாய் உன்னிப்புடன் கேட்டறிந்த அரசன் எழுந்து வெகுண்டு கோப மீறி ஆஹா, இச் சண்டாளி யினால் என் புத்திரியையும் இழந்து, என் புத்திரனைப்போல் பாவித்த சந்திரனையும் இழந்துவிட்டே னல்லவா. நான் இதோ சென்று அந்தக் கொலைபாதகியான புஷ்பாவதியை என் கையி னாலேயே கொன்றுவிடுகிறேன். இந்தப் பாபியின் மயக்கத்தி னாலல்லவோ மேனகாவைத் துறந்துவிட்டேன். என் மதுரவேணி இப்பெழுதிருந்தாளாகில் இச் சம்பவங்களைக் கண்டு சகிப்பாளா என்று கண்ணீர்விட்டுக் கதறினான். திரும்பவும் தாரா இனி என்னை யாவரும் நிந்திப்பார்களே என் செய்குவேன். ஆஹா, என் வயறு எரிகிறதே. என் மனம் துடிக்கிறதே.

ஐயகோ பொருந்தார்கை வேல்நுதிபோல்பரல்பாய
மெல்லடிகள் குருதிசோர விரும்பாதகான் விரும்பி
வெயிலுதைப்ப வெம்பசிநோய் கூற இன்று அரும்பாவி
சொற்கேட்ட வருவினையே னென்செய்குவே னந்தகோயானே

என்று ஸ்ரீராமனைக் கான்புகவிட்ட தசரதர் புலம்பி யழுதாரே, ஆஹா அப்பேர்பட்ட சமயம் எனக்கும் வாய்த்துவிட்டதே என்செய்வேன். தாராவதி, நீ எப்படியாவது என் மதலை மேனகாவையும், என் மருமகன் சந்திரனையும் கண்டுபிடித்துக்

கொடுக்கவேண்டும். உனக்கு மிகவும் வந்தனம் என்று மிகவும் துக்கத்துடன் கூறிக் கதறி ஒருவாறு மனந்தேறி தாராவதி யளித்த லிகிதத்தைப் பிரித்துப் பார்த்தான். அதில்

என் பிதாவுக்குச் சமதையான ராஜ் ராஜேஸ்வரனுக்குச் சந்திரன் மிகவும் வணக்கத்துடன் எழுதுவதாவது :—

நீங்களறியாமல் நான் உங்களுக்கே ஒரு துரோகம்செய் துவிட்டேன் அதற்காக என்னை க்ஷமிக்கவேண்டும். உயிர் போகும் ஆபத்தான நிலைமை யிலிருந்ததனால், இம்மாதிரி செய்தேன். மன்னிக்கவும்.

இப்படிக்குச்
சந்திரன்.

என்று வரையப்பட்டிருந்தது. அதைப் படித்த அரசன் சந்திர னுடைய பேருதவிச் செய்கைக்கும், அவனுடைய வணக்கத்துக் கும் களிப்பெய்தி மகிழ்வடைந்து தாரா, இனி உன்னுடைய தய வினால்தான் நான் அவர்களைக் காணவேண்டுமென்றான்.

தா.—மன்னே ! நான் தங்கள் கட்டளையின்படியே செய்கி றேன். நீங்கள் புஷ்பாவதியைக் கொலை செய்யவில்லையென்று கூறவேண்டும்.

அ.—தாரா ! என்ன நீ கூடப் புத்தியற்றவள்போன்று கூறுகிறாய். அச்சண்டாளத் துரோகியைக் கொன்றால்தான் என் கோபம் தணியும். அதனால் பாபமும் நேரிடாது.

தா.—வேந்தர் கோமானே ! அப்படியல்ல, பெண்பழி மிக வும் கொடிது. மேனகாவின் காலவசத்தினால் இப்படிப்பட்ட காரியங்கள் நேரிட்டன. அதனால் புஷ்பாவதியை மன்னிக்க வேண்டும்.

அ—நல்லது. உன்னுடைய வேண்டுகோளுக்காக அந்தப் பாபியை மன்னித்தேன். இதோ நான் சென்று உனக்குச் செலவுக்குத் தேவையானதை அனுப்புகிறேன். நீ சீக்கிரத்தில் சென்று என் இரு கண்மணிகளையும் கண்டழைத்து வா என்று கூறிவிட்டு உடனே அரண்மனையை நாடிச்சென்று ஒரு பணச்

பையை எடுத்து தாராவதியிட மளிக்கும்படி ஒரு காவலனிடம் கட்டளையிட்டு, வேகமாய்ப் புஷ்பாவின் அறையை நோக்கிச் சென்றனர். அரசன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த இளவரசியிட மணுகி அவள் தலைமயிரைப் பிடித்திழுத்து ஹே கொடிய நாகமே உன்னாலல்லவோ எனக்கு நற்பெயரழிந்து, குழந்தையை ஆதரிக்காதக் கொடும்பாவியென்னும் பட்டம் பிறந்தது. இருக்கட்டும், தாராவதியினால் உன்னுடைய உயிர் நமன் கையினின்று தப்பிற்று. இல்லாவிடில் இப்பொழுதே கொலைசெய்து விடுவேன். அடே சேவகர்காள்! இவளைக் கொஞ்சமேனும் தயாதாக்ஷிண்யமில்லாமல் கடுஞ்சிறையி லடைத்துக் காவல் புரியுங்களென்று ஆஞ்ஞாபிக்க, உடனே சேவகர்கள் புஷ்பாவதியை இட்டுச் சென்றனர். அரசனும் தன் கோபாக்கினியை ஒருவாறு தணித்துத் தன்னிருப்பிடம் சென்றான். தாராவதியும், வேந்தன னுப்பிய திரவியங்கள் ஆபத்துக் காலத்தி லுதவுமென்று பெற்றுக்கொண்டு மாற்றுடை தரித்து உருமாறிப் பணங்களையும் பத்திரமாய் பதுக்கிக்கொண்டு வீட்டைவிட்டுக் கிளம்பிக் காட்டகத்தை நோக்கிக் கால்நடையாகவே புறப்பட்டுச் சென்றாள்.

இஃதிவ்வாறாக, கானகத்தில் கண்ணுறங்கிய காதலர்களிருவரும் விழித்து எழுந்து அங்குள்ள காய்கனிகளைப் புசித்து மேலும் குதிரைகளின் மீதேறிச் சவாரிசெய்து நடுக்காட்டையடைந்தனர். இம்மாதிரியே இரண்டு மூன்று நாட்களைக் கழித்துப் பிறகு அஸ்வங்கள் நுழையமுடியாதபடி வளர்ந்திருக்கும் புதர்களைக் கண்டு பச்சாதாபமடைந்து, இருவரும் புரவிகளைத் தட்டிக்கொடுத்துக் கண்ணீருதிர்த்து அவைகளை அங்கேயே விட்டுவிட்டுப் பாதசாரிகளாய் இன்னும் சற்றுதூரம் சென்றதும் இருள்வந்து சூழ்ந்தமையால் அங்கேயே ஓரிடத்தில் சயனித்தனர். நடந்த அலுப்பினால் மெய்மறந்து நித்திரையும்கொண்டனர். **ராமேஸ்வரம் போகிலும் சனீஸ்வரன் பின்னால்** என்றபடி மேனகாவின் கஷ்டங்கள் அத்துடன் நீங்காதபடியினால் அச்சமயம் அங்குவந்த கள்வரிருவர் மேனகாவை உற்றுநோக்கி, அவளு

டைய ரூபலாவண்யத்தைக் கண்டு, ப்ரமைகொண்டு மயங்கி அவளைக் கைப்பற்ற எண்ணங்கொண்டு சந்தடிசெய்யாமல் அவளை மெதுவாகத் தூக்கி வெகுதூரம் சென்று அங்குள்ள ஒரு மலைப் பாறையின்மீது கிடத்தினர். சற்று நேரத்தில் கண் விழித்த மேனகா தன் பக்கலில் நாயகனைக் காணுமல் தியங்கித் திருடர்களைக் கண்டு பாம்பின் வாய்ப்பட்ட தேரைபோன்று உயிர்பதைத்து உளம்நடுங்கி இதுவும் விதிவசமோவென்று துக்கித்து, எதற்கும் கடவுள்தான் துணையென நினைத்து, தைரியத்தைக் கைவிடாமலெழுந்து நின்று யாரடா அவர்கள்? என்னை எவரிங்கு எடுத்து வந்தனரென்று அதிகாரத் தொனியுடன் மிகவும் பிரயாசைப் பட்டு மொழிந்தனள்.

தி.—என்ணு அம்மணீ! அதுகாரம் பண்ணுரே!! நாங்கதா கொண்டாந்தோம்; ஏண் கேக்கீறே?

மே.—அடா நீசர்களா இதோ என் நாயகன் வந்தாராகில் உங்களுடைய உயிரை யமனுலகு அனுப்பிவைப்பார்! சீக்கிரமாய் என்னைவிட்டு விலகிச் செல்லுங்கள்.

தி.—(சிரித்து) அடியாத்தே! என்ணுசொள்ளறே. உங்கப் பண், உங்கதாதாகூட இங்கனே வரமுடியாது. சும்மா மரட்டாதேயடீ, போடீ.

மே.—(பார்த்தாள். இவர்களை மிரட்டுவதில் பயனில்லை. நயத்தினுலாவது வெல்லலாமென நினைத்து) என் அண்ணன்மார்களே என்சுதேகத்திலுள்ள ஆபரணங்களை நானே கழற்றிக் கொடுத்துவிடுகிறேன். வாங்கிச் சென்றுவிடுங்கள்.

தி.—எங்கலுக்கு நவே, கிவே, வாணும், நீ எந்திரிச்சு எங்ககூட வூட்டுக்கு வரணம். இல்லாட்டா தூக்கிகினுபூடுவோம் என்ணு சொல்றே.

மே.—நான் எதற்காக உங்கள் வீட்டுக்கு வரவேண்டும். தயவுசெய்து செப்புங்கள்.

தி.—அதல்லாம் இப்பசொள்ளமாத்தோம். வந்திரி; என்று உபத்திரவப்படுத்த அதைக்கண்ட மேனகா, மிகவும் பீதியை யடைந்து ஆஹா என்ன் ஜன்ம மெடுத்தேன். இதென்ன சங்க

டம். இன்னுமிவர்களிடம் என்னென்ன ஆபத்துக்களை யனுபவிக்க நேரிடுமோ என் செய்குவேன். என்நாதா! தங்களையும் பிரிந்து எப்படி உயிர் வாழ்வேன் நீவிரெவ்விடம் சென்றீரோ! என்னைப்பற்றி எவ்வித வருத்தத்தை அடைந்தீரோ! கவலையென்னும்பேய் என்னுடனல்லாமல் தங்களையும் வாட்டும் சண்டாளத் துரோகியாகிவிட்டேனே! என்பிரியகாதலனேயென்று புலம்பிப் ரலாபித்தனள். அதைக் கண்ணுற்ற கள்வர்கள் மேனகாவை வெருட்டி, அதட்டி எண்ணுடிகுட்டி! சாலமல்லாம் பண்ணுரே! வாராயா ஒரு ஒதே தாரட்டுமா? என்று கூற, மேனகா பயந்து அவர்களுடன் செல்லத் தயாராகி விட்டனள். இருவருமிவளை முன்னும் பின்னுமாகக் காவல்புரிந்து செல்ல, ஒருவன் மற்றவனைப் பார்த்து அண்ணே அண்ணே ஒயு பாட்டுச் சொள்ளுடா, வளிசீக்கரம் தொளையுமென அவனும் கர்த்தபத்தை யொத்த தன் குரலை வெளிப்படுததி,

(ஆண்டியேனும் மெட்டு)

நல்ல குட்டியடா அண்ணே,
  நல்ல குட்டியடா;
அளவுலே ஜோக்குத்தான்
  நடையிலே குளுக்குத்தான்,
நம்ப வூடு வந்துட்டாக்க
  நண்ணுக வசசுக்கோணம். (௧)

என்று சொல்லி அண்ணே நீ ஒண்ணுசொள்ளு என்றான்.

ஜோக்குத் தானடா, தம்பீ
  சொவுசு தானடா,
ஜிள்குட்டி நம்மாகிட்டே
  லேசாவ சிக்கிக் கொண்டா;
சீக்கிரமா வூட்டுக்குமே, நாம்பளுமே
  போய்த்துடணும்—(௧) என்று பாடி

ஒருவாறு ஓய்ந்தனர். அண்ணே நெல்லபாட்டுடா நம்மவூடும் வந்திடிச்சி என்று பனையோலையினால் கட்டப்பட்ட ஒரு குடிசைக்கு வந்தனர். அதைக் கண்ட மேனகா திகிலடைந்து ஆஹா நாம் என்ன செய்வோம். என் நாதனுமில்லையே, என் தாய் தாராவதியு மில்லை. என்னை எவர் இவ்விடத்தினின்று மீட்கப்போகின்றார்கள் என்று ஏங்கி மிகவும் பரிதாப நிலைமையை யடைந்தனள்.

தி.—ஏகுட்டீ! உண்ணைப் பாத்தா ராசாமவளாட்டம் இருக்கு; நீ யாரைக் கண்ணாளம் பண்ணிக்கிறே—

மே.—மௌனம் — —

அண்.—அடேதம்பீ நம்பரண்டுபேத்து அளகையும்கண்டு ஆரைப் பண்ணிப் பதின்று தெரியாமே நிக்கரா. நான்தான் மூத்தவெண்; எண்ணைக் கட்டிக்கிடட்டும்.

த.—அடேடே; நான்வுடுவேனு; அதல்லா முடியாது. அண்ணே நமக்குள்ளாரே சண்டேகிண்டே வாணும். நாண் சொள்றபடி செய்துடலாம்.

அ.—எண்ணு சொள்ளப் போறே.

த.—முன்னே ஒயுநா நம்மாதாதா ஒயுகதே சொண்ணுங்க, அப்படித் தாண்.

அ.—எண்ண எளவுடா அது.

த.—கோவிச்சுக் கிடாதே யண்ணே; முண்ணே ஒயுகாலத்திலே ஆரோ பாண்டவங்கஇன்னு அன்சுபேர் இருந்தாங்களாம்; என்ணு அண்ணுத்தே.

அ.—அடீட முளுவதையும் சொள்ளியளுடா.

த.—அவுங்க அம்முட்டுப் பேத்தையும் தோவதி இண்ணு ஒயு ராசாவூட்டுப் பொண்ணு கண்ணுளம் பண்ணிக் கிட்டாளாம். அதுமாதிரி, நம்பரண்டு பேத்தையும் இந்தக் குட்டி கட்டிகிட்டு மேயென இவற்றையெல்லாம் செவியுற்ற மேனகா மனதிற்குள் ஆஹா மிகவும் பதிவிரதா சிரோன்மணியான திரௌபதியை இந்தப் பாபிகள் நிந்தனை செய்கின்றார்களேயென்று வருத்தமுற்றுக் கண்ணீர் சொரித்தனள்.

தி.—என்னுகுட்டி வதிலு சொல்லாரே.

மே.—என்ன செய்யவேண்டும்.

தி.—எங்க ரெண்டுபேத்தையும் கண்ணுளம் பண்ணிக்கணம்.

மே.—அப்படியா நல்லது. நான் உங்களிடம் அகப்பட்ட பொழுதே நான் உங்களுக்குச் சொந்தமாகி விட்டேன். இனி என்னால் தப்பிப்போக முடியாது. உங்களிருவரையுமே மணம் புரிகுவேன். ஆனல், எனக்கு ஒருஇடையூறு இருக்கின்றது. என்னசெய்வேன்.

தி—என்ணு எடையாறு சொள்ளு.

மே.—எனக்கு ஒரு விருதமுண்டு; அது இன்றுமுதல் இருபது நாட்கள் அனுசரிக்கவேண்டும். அதுவரையில் நீங்களென்னைப் பார்க்கவேகூடாது.

தி.—ஆனுச்சரி. அப்பறம்.

மே.—பிறகு உங்களையே கல்யாணம் செய்துகொள்வேன்.

தி.—எங்கவூட்டுலே பொம்பளேங்க கடையாதே; உணக்குத் தொணைவாணுமா?

மே.—எனக்கு யாரும் வேண்டியதில்லை. நான் தனியாக இருப்பதுதான் நல்லது.

தி.—உனக்கு ஆவாரம் கொண்டாந்து போடணுமே; என்ன சேவோம்.

மே.—நான் பழங்களைத் தவிர யாதொன்றும் புசிக்க மாட்டேன். அதனுல் மரங்களிலுள்ள கனிகளைப் பறித்துத் தின்பேன். போய்வாருங்கள்.

தி.—ரெம்ப சந்தோஷம். எங்களுக்கு இன்னொரு பெரிய மெத்தை வூடு இருக்கு. அங்கணே தான் பளமல்லாம் அம்புடும். அங்கணே வா, என்று இளவரசியை அழைத்துச் சென்று வேறொரு குடிசையில் விட்டு, அடியாத்தே, குட்டி, இண்ணம் இறுவது நாளானதும் நாங்க வந்தூடுவோம்; நினேப்பிருக்கட்டும். இங்ஙணேயிருந்து, தப்பிச்சுக் கிடலாமிண்ணு நினேயாதே. இங்கேருந்து கீளே பூமி நானூறு அடி ஆழமிருக்கு. பத்தரம்; நாங்க போய்வரட்டுமா, நீ பளம் கிளம், திண்ணு; சும்மா பட்டிணி கடந்து சாவாதே.

மே.—ரொம்ப சரி. உங்களைப்போல் நல்ல மனிதர்கள் இந்த வுலகிலேயே கிடையாது. இன்னமிருபது நாட்கள் நீங்கள் வராமலிருந்தால் தான் மணம்புரிவேன். இல்லையேல் உயிரை விடுவேன்.

தி.—ஐயையோ. அப்படிப் பண்ணிப்பூடாதே; நீ சத்துப் போனு, நாங்கரண்டு பேரும் சத்தூடுவோம். இறுவது நாள் வாரலே. போய்வாரோம்.

மே.—மிகவும் உத்தமர்கள், போய்வாருங்கள்.

என, இருவரும் இஞ்சி தின்ற குரங்குபோல் விழித்துக் கொண்டே சென்றுவிட்டனர். அவர்கள் மோய்விட்டதை யறிந்த மேனகா, மிகவும் துக்கித்து, என் பிரிய காதலா, தங்களின் திருமுக மண்டலத்தை என்று காண்பேன்! உங்களைக் கண்டபிறகல்லவோ என் கலி தீரும்! என்ன செய்வேன்! இவ்வளவு கஷ்டப்படும்படியாக பிரமன் என் தலையில் விதித்தானே! என் செய்குவேன்! ஏ! ஜகதீசா! கிருஷ்ணா! ஸ்ரீவைகுண்டா! விஷ்டாஈல்வரா! தாமோதரா! புண்டரீகாக்ஷா! கருடத்வஜா! கோவிந்தா! ஹே! விஷ்ணு! கைத்யாரி! மதுசூதனா! தயாநிதே! இனி எப்படிப் பிழைப்பேன்! ஏது செய்குவேன்! என்னை ரக்ஷிப்பதும், பக்ஷிப்பதும் நின் செயலல்லாமல் வேறல்ல! நானிவ்வளவு கொடுமைகளை அனுபவிக்க யாது தீங்கிழைத்தேனோ! என்று பலவாறு ஸ்தோத்திரங்கள் செய்து துதித்துக்கொண்டிருக்கையில் பசிக்களைப்பினால் தன்னையறியாமல் படுத்துக் கடுந்துயிலிலாழ்ந்தனள். பிறகு வெகு நேரம் கழித்துக் கண்விழித்துப் பார்க்கையில் ஆதித்தன் மேனகாவின் கொடுமைகளைக் காணமுடியாமல் மறைகின்றவன் போல் மலைவாயிலில் விழுந்தனன். மேனகாவுக்குக் குக்ஷி பாதை பொருக்கமுடியாமல் காதடைத்தன். கண்கள் இருண்டன; கால்கள் துவண்டன; தாகத்தின் கொடுமையால் நா வறண்டது; என்ன செய்வாள் பாபம்! மெல்லவெழுந்து குடிசையின் வெளிப்புறம் வந்தனள். அங்கு அநேக துஷ்ட ஜந்துக்கள் சஞ்சரித்தன. குரங்குகள் கீச்சலிட்டன; இவைகளையெல்லாம் கண்ட கன்னிகை நடுங்கி, இரவு வந்துவிட்டால் இன்னும் கஷ்டமென நினைத்து, அங்கு அருகிலிருந்த மரத்தினடியில் வந்து ஏதாவது கனிகள் உளதா வென்று மேலே நோக்கினள். கடவுளினருளால் அது மாமரமானதினால் அதில் அநேக மாங்கனிகள் பழுத்து, பறிப்பாறின்றித் தழைந்து குலுங்கின. கனிகளைக் கண்ட கண்மணி தன் துக்கத்தையெல்லாம் மறந்து, ஆநந்தமடைந்து தனக்கு வேண்டிய அளவு பறித்துப் புசித்துப்

பக்கத்தில் ஓடிவந்த மலை அருவியில் கைகாலலம்பித் தண்ணீரருந்தி தாகவிடாய் தீர்த்து களைமாறி, மறுபடியும் குடிசைக்கு வந்து, அங்கு மிகவும் பந்தோபஸ்தாய் கட்டியிருந்த முட்படல்களினாலமைந்த கதவுகளைச் சாத்திக்கொண்டு, உள் நுழைந்து நித்திரை செய்தாள். மறுதினம் காலை யெழுந்து மேனகா சற்றும் களைப்பில்லாமல் ஊக்கமடைந்து, தான் தப்பிப் போகவேண்டிய வழி ஏதாவது உளதா என்று ஆராய்ந்தனள். அக்குடிசைக்குள் காற்று வருவதற்காக வேண்டி சிறு ஜன்னல் போன்று ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அதைத்தவிர, சிறு வெளிகள் கூடக்கிடையாது. அந்த ஜன்னலின் வழியாக தரைமட்டத்தை நோக்க, பூமி கண்ணுக்குப் புலப்படவேயில்லை, கள்வர் கூறினது உண்மையென அறிந்தனள். என்ன செய்வதென்று தெரியாமல் தயங்கினள். மறுபடியும், **ஊக்கமது கைவிடேல்** என்று சோர்வடையாமல் நன்றாய்க் கவனித்துப் பார்க்கையில் ஓர் மூலையில் ஓலைகள் கட்டிய கயிறு ஒரு சுருட்டு மிகுதியாகப் போடப்பட்டிருந்தது. அதைக்கண்டதும் மேனகாவின் முகம் சந்தோஷத்தினால் மலர்ந்தது. அதைக்கொண்டு தப்பிப் போகலாமென எண்ணி, ஜன்னலினருகில் வந்து ஆலோசனைகள் புரிந்து கடைசியில் ஒருமுடிவிற்கு வந்து ஜன்னலென்று பிணைக்கப்பட்டிருந்த மூங்கிற்குச்சிகளை வலுவினால் பெயர்த்தெறிந்துவிட்டுக் கயிற்றில் ஒரு சுருக்குப்போட்டு எதிரிலிருந்த ஒரு பெரிய விருக்ஷத்தை நோக்கி விட்டெறிய, அது நற்காலத்தின் பயனால் மரத்தின் கிளையில் நன்றாய் மாட்டிக்கொண்டது. மேனகா அகங்குளிர்ந்து, மற்றொரு நுனியைக் குடிசையின் மூங்கிலில் வரிந்து கட்டிவிட்டுக் களிப்படைந்து, முயற்சியைக் கைவிடாமல் மெதுவாக ஏறிச் சன்னலின் வழியாக நுழைந்து கயிற்றைப் பற்றிக்கொண்டு அதிக ஜாக்ரதையாய் மரத்தை நாடி வருஞ்சமயத்தில் **நாமொன்றுநினைக்க தெய்வமொன்று நினைக்கும்** என்றபடி, மேனகாவின் அதிருஷ்டஈனத்தினால் கயிறு அறுந்துவிட்டது. அதனால் மேனகா பூமியில் விழும்படி நேரிட்டது. ஆனாலச்சமயம் அங்கு வந்துகொண்டிருந்த ஒரு

வாலிபன் மேனகாவை யொரு குழந்தையைப்போல கரத்தில் தாங்கிக்கொண்டான். ஆனாலுமவள் மிகவும் உயரத்திலிருந்து விழுந்தமையால் மூர்ச்சித்துவிட்டனள். உடனே அவ்வாலிபன் எங்கு தேடியும் தண்ணீரகப்படாமல் தயக்கி, மேனகாவையும் தோளில் சுமந்துகொண்டே வெகு தூரம் சென்று ஒரு ஓடையைக் கண்டு, தரையில் மெள்ள மேனகாவை விடுத்துத் தண்ணீரெடுத்து வந்து முகத்தைத் துடைத்துக் கொஞ்சம் வாயிலும் ஊற்றிக் களையை மாற்றுவித்தான். அவ்வாலிபன் மேனகாவை அடையாளம் கண்டுகொண்டான். (இச்சிறு கதையைப் படிக்கும், நம் நேயர்களுமறிவார்களென்று நம்புகிறேன். ஆனால் சந்திரனல்ல.) அவ்வாலிபன் செய்த உபசரணையினால் மேனகா, சற்றுநேரத்தில் கண்விழித்தெழுந்து கனவோ, நினைவோ, என நினைத்து அவ்வாலிபனை நோக்கி மகாப்ரபூ, மகானுபாவரே, தாங்கள் யாரோ தெரியவில்லையே; நான் எவ்விதமா யிவ்விடம் வந்தேன்; எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே என்று மிகவும் வினயத்துடன் வினவினாள்.

வா.—பெண்மணியே, நான் ஒரு வழிப்போக்கன், நான் கானகத்திலேயேதான் காலங்கழித்து வருகின்றேன். அகஸ்மாத்தாய் மலையடிவாரத்தில் செல்லுகையில் நீ உயரத்திலிருந்து கீழே விழுவதையறிந்து கரத்தினில் தாங்கிக்கொண்டேன், ஆனால் விழுந்த அதிர்ச்சியினால் நீ மூர்ச்சை யடைந்தமையால் தண்ணீர்வேண்டி உன்னையுமெடுத்துக்கொண்டு இவ்வோடையை அணுகினேன். இதுதான் நான் உன்னைச் சந்தித்த வரலாறு. நீ யாரம்மா, நீ கீழே விழவேண்டிய காரணம் யாது என்று அவளையறியாதவன்போன்று கேட்டான்.

மே.—ப்ரபுவே. என் உயிரை அளித்த உத்தமனே! தங்களிடம் உரைக்கவும் தடையுண்டோ. நான் ஒரு மகா பாவி! இருந்தபோதிலும் தடையின்றித் தங்களிடம் உரைக்கின்றேன். நான் மோகினிபுரி அரசனின் மகள். நான் சிறு வயதிலேயே என் தாயை இழந்துவிட்டேன். என் பிதா மறு விவாகம் புரிந்தார். என் மாற்றாந் தாயின் கொடுமை சகிக்காமல் என் காதல

ருடன் கானகம் வந்துவிட்டேன், என் விதிவசத்தினலவரையும் பிரிந்து கள்ளர்களிடம் சிக்கி இந்த மலைக்குகையில் சிறை வைக்கப்பட்டிருந்தேன் அதிலிருந்து தப்புவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துவரும் சமயத்தில் கயிறு அறுந்துவிட்டது. அவ்வளவுதான் எனக்குத் தெரியும். இப்பொழுது உங்களால் ஆதரிக்கப்பட்டு இவ்விடமிருக்கின்றேன். இதுதான் என் வரலாறு என்று கூறிக் கண்ணீர் சொரிந்தாள். தன்னை மேனகா அடையாளம் கண்டுகொள்ளவில்லையென்பதை அறிந்த வாலிபன், தானுகக் கூறவேண்டாமென நினைத்து ஐயோ பாபம், உன்னுடைய சரிதை, மிகவும் விசனகரமாயுள்ளது. நாதனையும் பிரிந்துவிட்டாயே. உனக்கு யாராவது அந்தரங்கத் தோழிகளிருந்தால் உன்னுடனழைத்து வந்திருக்கக்கூடாதா என்று தானும் துக்கத்துடன் மொழிந்தான்.

மே.—ஐயனே! என்னுடைய செவிலித்தாயும், எனக்கு உயிர்த்தோழியுமான ஒருவள் இருக்கிருள். அவளைச் சில காரியங்கள் நிமித்தமாக நிறுத்தி வந்துவிட்டோம். அஃதுமன்றி அவளும் நம்முடன் கஷ்டப்படவேண்டுமேயென்பது மற்ரோர் எண்ணம். ஆனல் அவள் வந்துவிடுவேனென்று உறுதியாகக் கூறியிருக்கின்ருள். ஒருக்கால் கானகம் வந்து எங்களைக் காணுமல் கவலைப்படுகின்ருளோ என்னமோவென்று தாராவதியை நினைத்துத் துக்கித்தனள்.

வா—அம்மணி, விசனப்படுவதில் யாது பயன். நாம் முன் செய்த தீவினையின்படியே யாவும் நடக்கின்றன. விதிவலிதே தவிர மதி பெரிதல்ல. தைரியத்தைக் கைவிடாதீர், இன்னும் அக்கள்வர் கையிலகப்படாமல் தப்பிச் சென்றுவிடுங்கள். நானும் போய்வருகிறேன். விடை கொடுங்கள்.

மே.—ப்ரபுவே! தாங்கள் செய்த நன்றியை ஒருக்காலும் நான் மறக்கமாட்டேன். சென்றுவருகிறேனென்று கூறி வாலிபனுக்கு வந்தனமளித்துவிட்டு, மறுபடியும் அந்தக் காட்டுப்பாதை வழியாகவே சென்ருள். வாலிபனும் வனத்தில் மறைந்தான்.

---

# 5-ம் அத்தியாயம்.

படுத்துறங்கிய பாலச்சந்திரன் கண்விழித்தெழுந்து தன் கண்மணியான காதலியைக் காணுமல் திகைத்துச் சரேரென எழுந்து நாலாபக்கமும் சுற்றிப்பார்த்து மேனகா மேனகா வெனக்கூவியும் மேனகாவைக் காணும். **ஆளிருந்தாலல்லவோ அரவம் வரும்?** சந்திரன் திகிலடைந்து ஹேப்ரியே! என் காதலியே! என்ன செய்வேன். நீ என்னையே தெய்வமென எண்ணி நாட்டைத்துறந்து காட்டகம் வந்தாயே எங்கு சென்ருயோ! எந்தத் தீயர்களிடம் அகப்பட்டுக்கொண்டாயோ! அல்லது வனத்துமிருகங்களுக்கு இரையாகிவிட்டாயோ!! இனி நான் எவ்வாறு உயிர்தரிப்பேன்!!! சண்டாளனை என்னுடன் வந்ததினுலல்லவோ உனக்கும் துன்பம் நேரிட்டது. இனி நான் எப்படி உன் ரூபலாவண்யத்தைக் காண்பேன். குயிலினுமினிய குரல்வாய்ந்த உன் மொழிகளை என்று கேட்கப் போகிறேன். என் மேனகா! நான் என்ன செய்வேன். ஹே கிருபாகடாக்ஷா! தயாநிதி! வாசுதேவா! முகுந்தா! மாதவா! வனமாலி! யாவர் குறைகளையும் நீக்கும் அச்சுதா! எங்கள்மீது இரக்கம் வரவில்லையோ! நாங்கள் செய்த பாபமோ! **அனாதைக்குத் தெய்வமே துணை** யென்றபடி மேனகாவை நீர்தான் காப்பாற்றவேண்டும். என் அப்பனே! ஆராவமுதனே! அன்பர்க்கினியனே! என்று பலவாறு பகவானை ஸ்துதித்து இருவிழிகளிலும் நீர் சொரியக் கதறிப்புலம்பி ஆற்ருெணுத் துயரத்துடன், கானகத்திலலைந்து எங்கும் தேடிப்பார்த்தான். காதலி யகப்படவில்லை. என்ன செய்வான் பாபம். இவனுக்கோ பசியின் கொடுமை சகிக்க முடியவில்லை. கண்களிருண்டன. கால்கள் முட்களினுல் கிழிக்கப்பட்டு இரத்தம் பீரிட்டன. அதன் வலியோ பொருக்கமுடியவில்லை. அபபடியே ஓர் மரத்தினடியில் உட்கார்ந்தான். மனதிலெழுந்த துக்கமோ சொள்ளிட முடியுவில்லை. சந்திரன் தன் வயிற்றின் கொடுமை சகிக்காமல் மரத்திலேதாவது கனிக

ளுளதோவென்று அண்ணுந்து பார்க்க, அது ஆலவிருக்ஷமானதி ஞல் கனிகளிருந்தும் பயன்படாமற் போயின. இன்னும் சற்று தூரமெழுந்து, மெல்ல மெல்ல நடந்து, சுற்றி நோக்கக் கொஞ்ச தூரத்தில் ஒரு தோட்டம்போல் தென்பட்டது. அதைக் கவனித்துக்கொண்டே தோட்டத்தினருகில் வந்து சேர்ந்ததும் அங்கிருந்த மரங்களெல்லாம் பழுத்துப் பறிப்பா ரின்றிக் குலுங்குவதைக் கண்டு, ஆநந்தங்கொண்டு, தனக்கு வேண்டிய கனி வர்க்கங்களைப் பறித்துப் புசித்துப் பசியை தணித்துக்கொண்டு பிறகு தோட்டத்தின் காக்ஷிகளையெல்லாம் காண்பதற்காக மறுபுறமாய்ச் செல்ல அங்கோர் தடாகம் தென் பட்டது. தண்ணீரையும் கண்ட சந்திரன் ஆநந்த ஸாகரத்தில் மூழ்கிக் குளத்தினருகில் சென்ருன். அந்தத் தடாகத்தில் ஏதேஷ்டமாய் அல்லி, தாமரை, நீலோற்பலம் முதலிய மலர்கள் நிறைந்திருந்தன. அன்னப்பறவைகளும் சக்ரவாகப் புட்களும் யாதொரு கவலையுமின்றி வெகு ஆநந்தத்துடன் நீந்திக்கொண் டிருந்தன. படிக்கட்டுகளில் யாதொரு தூசியும் படியாமல் மிக வும் ரமணீயமாய் பரிசுத்தமாகவிருந்தன. சந்திரன்படிகளிலிறங் கித் தண்ணீரருந்தித் தாகவிடாய் தீர்ந்து ஜலம் மிகவும் துல்லிய மாகவும், ஸ்படிகம்போல், தெளிவுள்ளதாகவு மிருந்தமையால் ஸ்நாநம் செய்ய ஆவல்கொண்டு இறங்கி ஸ்நாநஞ்செய்து கரை யேறி, ஈரவஸ்திரங்களை உலர்த்தி உடுத்தி, ஆஹா, இக்கானகத் திற்குள் இந்தச் சோலை மிகவும் ரமணீயமாகவும் நிர்மலமாக வுமிருக்கின்றதே; மலர்களின் மணம் எவ்வளவு கம்மென்று வீசுகின்றது! தென்றல்காற்று ஜில்லென்றுவீசித் துக்கங்களை மறைத்துச் சுகத்தையளிக்கின்றது. தரையில் பச்சைவெல் வெட் மெத்தை விரித்தாற்போல் பசும்புற்கள் எவ்வளவு அழ காய் படர்ந்திருக்கின்றன!! இப்பேர்பட்ட தோட்டத்தில் மனித சஞ்சாரமில்லையே என்று பலவாறு எண்ணமிட்டுக் கவலை களைமறந்து, தோட்டத்தை முழுவதும்சுற்றிப் பார்க்கஎண்ணங் கொண்டு சுற்றிவந்தான். அப்படியெல்லாக் காக்ஷிகளையும் கண் ணுற்றுவரும் சமயத்தில் ஓர் பெரியவிருக்ஷத் தினடியில் ஒரு

மகானுபாவர் ஐம்புலன்களையுமடக்கி இக்காயத்தைத் துரும் பெனமதித்து மனதை ஸ்ரீமன்நாராயணனிடத்தில் செலுத்தி யோகநித்திரையிலாழ்ந்து வீற்றிருப்பதைக் கண்டான். அவரைக் கண்டசந்திரன் புளகாங்கிதனாகி ஆஹா இந்தப் பெரியோரை அணுகி அவருடைய கடாக்ஷம்பெற்றால் நம்முடைய இடுக்கண் கள் விலகிவிடுமென்று ஆநந்தமடைந்து தன் உத்தரீயத்தை இடுப்பில் வரிந்துகட்டி அஞ்சலிபக்தனாய் அப்பேரியோரினரு கில் அணுகி, மும்முறை வலம்வந்து சாஷ்டாங்கமாய்த் தெண்ட னிட்டெழுந்து எப்பொழுது கண்விழிப்பாரோ என்று ஏங்கிநின் றான். சற்று நேரத்திற்கெல்லாம் யோகநிஷ்டைகலைந்த பேரி யோர், சந்திரனின்வரவை ஞான திருஷ்டியாலறிந்து கண்விழித் தார். அதையறிந்தசந்திரன் மறுபடி தெண்டனிட்டெழுந்து, கைகட்டி, வாய்பொத்திநிற்க, முனிவர், குழந்தாய் தீர்க்காயுஷ் மான்பவா. உன்னைப் பார்த்தால் ஓர் அரசகுமாரன்போல் தோன்றுகிறதே, அப்படிக்கிருக்க நீ பரதேசியென்று இக்கடும் புலி வாழுங்கானகம் வரக்காரணம் யாது என்று வினவினார்.

ச.—தவச்ரேஷ்டரே, தாங்களறியாதது மிவ்வுலகி லுண்டோ. நான் உண்மையில் பரதேசிதானெனப் பகர்ந்து, மேனகாவைப் பிரிந்து, அவரைக் கண்டது வரை நடந்த சங்கதி கள் யாற்றையும் பொய் மொழியின்றிப் புகன்றான். இவைகளைச் செவியிலேற்ற தவமுனிவர் புன்சிரிப்புக் கொண்டு அப்பா நீயே சற்புத்திரன். பாலகா! நீ உண்மையில் பரதேசியல்ல. சகுந்தலா புரியை அரசாளும் சுகபூஷணனின் மகன். உன்பெயர் சந்திர னல்லவோ.

ச.—மகானுபாவரே! என்னுடைய நற்காலப் பயனாலல் லவோ தங்களைக் காணும்படி நேரிட்டது. என்பெயர் சந்திர னென்பதை மாத்திரம் நான் அறிவேன். அரசபுத்திரனென்பதை கனவிலும் நினைக்கவில்லை. நான் என்னகாரணத்தினால் தாய், தந்தையரைப் பிரிந்து இப்படி அனாதையாகவிருக்கிறேனென்ப தைத் தாங்கள் தயவுசெய்து மொழியவேண்டுமாய்ப் ப்ரார்த்திக்கி றேன்.

முனி.—அப்படியா என்று சற்றுநேரம் யோசித்துப் பிறகு சந்திரா! உன் தகப்பனிடத்தில் வஞ்சகமே உருக்கொண்ட ஒரு துர்மந்திரி இருக்கிறான். அவனுக்கு ஒருகுமாரனுண்டு. அவனும் உன்னுடையரூபத்தையே அடைந்திருந்ததினால், மந்திரி தன் மகன் ராஜ்யமாளக் கருதி வஞ்சகமாய் உன்னைக் காட்டில் கொண்டு விட்டுவிட்டுத் தன்மைந்தனை அரசன்பக்கலில் சேர்த்து விட்டான். இப்பொழுது உன்தகப்பனுக்கு வயதாகிவிட்டதினால் மந்திரியின் மகன் இப்பொழுது அரசுசெலுத்தி வருகிறான். நீ சென்று கொடுங்கோல் அரசாட்சியை நீக்கி, உன் செங்கோலைக் கைப்பற்றி மனுநீதி தவறாமல் அரசாட்சிபுரிந்து சுகஜீவியாய் வாழக்கடவாயென்று ஆசீர்வாதம் செய்தார்.

ச—மகரிஷே! நான் அரசகுமாரனென்பதை எப்படி அவர்கள் நம்பும்படியாக ரூபிப்பேன்.

மு.—மைந்தா! நான் மந்திரசக்திபொருந்திய ஒரு மணிக்கல் தருகிறேன். அதைநீ எடுத்துச்சென்று உன்தகப்பனும், சிற்றரசனாய் ஆளுவமைந்திருக்கும் மந்திரிமகனும், ருத்திராக்ஷப் பூனைபோல் கபடம்நிறைந்த மந்திரியும், மற்றுமுள்ளோரும் நிறைந்திருக்கும் ஸபையில்சென்று உன் வரலாறு யாவற்றையும் உரைத்து, நான் தான், ராஜகுமாரனென்று கூறு. அந்த வார்த்தைகளை அவர்கள் நம்பாவிடில், நான் கொடுக்கும் மணிக்கல்லை, பகவானை ஸ்மரித்து, அவரையே சாக்ஷியாகக் கூறிக் கீழே போட்டு மந்திரியின் மகனை எடுக்கச்சொல். அவன் அசத்தியவானானதினால் அக்கல்லை அவனால் அசைக்க முடியாது. அதற்கும் நம்பாவிடில் உன்னுடைய தாயை, அந்த சபையில் வரவழைக்கச்சொல். அவள் வந்ததும், உன்னுடைய ஆசைப் பெருக்கினால் ஸ்தன்னியபானம் சுரக்கும். அதையறிந்து, உன்னை யாவரும் நம்புவார்கள். அதற்கும் சந்தேகம் நீங்காவிடில், நீ சிசுவாயிருக்கையில், மட்டிப்பால் போடும் தங்கவட்டில் தவறி உன்காலில் விழுந்து புண்ணாகி அது தழும்பாக மாறியிருக்கிறது. அதைக் கூறினால் உன் தாய்முதல் யாவரும் ஆக்ஷேபணையின்றி ஏற்றுக்கொள்வார்கள். இதோ பார், அந்த அடையாளமென்று சந்திரனின் காலைச் சுட்டிக் காட்டினார்.

அதைக்கண்ட வாலிபன், ஆச்சரியங்கொண்டு பிரமித்து ஆஹா, இவர் தேவரிஷியும், த்ரிகால ஞானியுமான, நாரத முனிவரோ, அல்லது வசிஷ்டரோ, என்று திகைத்துப் பிறகு மகரிஷே! தவக்கடவுளே! என்னுடைய பரம குருவே!! தங்களுடையகிருபா கடாக்ஷத்தினல் நாடு நகரம் அடைந்து தாய், தந்தை, பந்துக்கள் யாவரையும் காணப்போகிறேன். என்னையே தஞ்சமென்று நம்பி வந்த என் காதலியான, மேனகாவை எங்கு சென்று தேடுவேனென்று வினயத்துடன் மொழிந்தான்.

மு.—சத்தியவாக்குத் தவருத உத்தம புருஷா! தஞ்சமென்றவர்க்கபயமளித்து, அதைக் காக்கும் குணசாலியே!! உனக்கு நாடு நகர முதலிய அளவிட முடியாத செல்வ நிலைமை வந்தும், நீ ஆதரிக்க அழைத்து வந்த பெண்மணியை மறக்காமலிருக்கின்றாய். நீயல்லவோ தர்மத்தை நிலை நாட்டும் புத்திமான்.

ச.—எனதாசாரிய சிகாமணியே! தாங்களிப்படி என்னைப் புகழ்வது தகுமோ. உங்களுடைய கிருபா நோக்கத்தினலல்லவோ நான் நல்ல வழியில் நின்று ஜீவிப்பது.

மு.—அப்படியா, குழந்தாய்! சந்திரா!! உன்னைப்போலொத்த சிஷ்யர்களுக்கு உபதேசிக்கும் மார்க்கமல்லவோ, உலகமெங்கும் பரவிப் பயன்படும். உன் புத்திசாலித் தனத்தை நான் என்னவென்று கூறுவேன். அப்பா, நீ நகர மடைந்ததும் உன்னுடைய வரவுக்காக, உன் தந்தை களிப்பெய்தி ஒரு பெரிய விருந்து நடத்துவார். அதில் நீ எதிர் பார்த்திருக்கும் இரு பெண்மணிகளும் காணப்படுவார்கள். ஒவ்வொரு ஆபத்திலும் உன் நாயகியை, அவளுடைய உயிர்த்தோழி தான் காப்பாற்றி வருகிறாள். சென்று வருவாய். எனக்கு நிஷ்டை புரியும் காலம் சமீபித்து விட்டது; போய் வருவாய், ராஜ குமாரா.

ச.—நமஸ்கரித்து, ப்ரபுவே, தங்களருளால் யாவற்றையுமறிந்து கொண்டேன். சகுந்தலாபுரி யெனும் பட்டினம் எந்தத் திசையிலிருக்கின்றதோ, தயை புரிந்து கூறவேண்டுமாய் கேட்டுக் கொள்ளுகிறேன்.

மு—சிஷ்யா, அதை மாத்திரம் உன்னுடைய சாமார்த்தியத்தாலறிந்துகொள்வாய். ஏதாவது ஆபத்து நேரிட்டால்

என்னை நினைத்தாயானால், அது சூரியனைக்கண்ட பனிபோல் விலகிவிடும். எனக்கு நேரமாகிவிட்டது; நீ சென்று வா என்று கூறி மணிக்கல்லை யளித்து சந்திரா, துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலன ராஜ நீதியுடன் நடுநிலை தவறாமல் அரசாட்சி புரிந்து வா; என்று ஆசீர்வாதம் செய்தார். சந்திரனும் இனி இங்கிருப்பது தகாதென நினைத்து நமஸ்கரித்து, விடை பெற்றுக் கானகத்தின் வழியாகவே தன் மனம் போனபடி நடந்து சென்றான். வெகு தூரம் சென்றதும் பின்னால் ஏதோ தட தடவென்ற சப்தம் கேட்க, உடனே திரும்பிப் பார்க்கையில் ஒரு மதம் பிடித்த யானை, நம் சந்திரனையே குறி வைத்துத் துறத்தி வந்தது. அதைக்கண்டதும் நடு நடுங்கி இனி நாமென்ன செய்வோம்; நம்மிடம் ஆயுதமுமில்லையே; இவ்விடம் மரங்களுமில்லையே; எப்படித் தப்புவது என்று ஏங்கி, திகிலடைந்து, மகரிஷியே, நான் என்ன செய்வேன்; ஆபத்தில் தங்களை நினைக்கும்படி அருளிச் செய்தீர்களே; உம்மைத் தவிர இந்த ஆபத்தினின்று மீட்பவர் எவருமில்லையே என்று குருவை நினைத்து நின்று விட்டான். இச்சம்பவங்களை நிஷ்டையிலேயே கவனித்த ரிஷி புங்கவர் உடனே ஒரு மந்திரத்தை உச்சாடனம் செய்ய, சந்திரனின் பின் வேகமாய் ஓடிவந்த கஜமானது உடனே தடாரென்று கீழே விழுந்து உயிர் துறந்தது. அதைக் கண்டான் சந்திரன், கொண்டான் ஆநந்தம். ஸ்ரீமந் நாராயணனைக்கண்டதும் துருவன் எப்படி மெய்மறந்து பரவசமாய் ஆநந்தக் கூத்தாடினனோ, அதே மாதிரி துள்ளிக் குதித்தான். ஆஹா! இவர் மூல பொருளான பகவானோ; அல்லது மார்க்கண்டனுயிரைக் காப்பாற்றிய சிவபெருமானோ; அல்லது யாவற்றையும் படைத்த பிரமதேவனோ; இவர் மகிமையைக் கூறுவதற்குக் கூட எனக்கு தெரியவில்லையே யென்று பலவாறு ஸ்துதித்து மேலும் நடந்தான். கொஞ்ச தூரம் சென்றதும் அஸ்தமனமாகி விட்டது. பக்ஷி ஜாதிகள் யாவும் தங்கள் தங்கள் இருப்பிடமாகிய கூடுகளை வந்தடைந்தன. துஷ்ட மிருகங்களெல்லாம் வெளிக்கிளம்பின. ஆகாயத்தில் நக்ஷத்திரங்களெல்லாம் மாணிக்க கற்களை

வாறி யிறைத்தாற்போல் ப்ரகாசிக்க ஆரம்பித்தன. மேலுலகத்துச் சந்திரன் பூர்ண கலேயுடன் தன்னுடைய க்யாதியைத் தெரிவித்துக்கிளம்பினன். நம்முடைய சந்திரன், கால்களின் நோவு பொருக்க முடியாமையினலும், இரவைக் கழிப்பதற்காகவும் வேண்டி ஒரு பெரியவிருக்ஷத்தை யணுகி, அதன் கீழ் சயனித்துக்கொண்டான். சற்று நேரத்திற்கெல்லாம், இரண்டு புருக்கள் அம்மரத்தின் மீதிருந்து பேசத் தலேப்பட்டன. சந்திரன், பக்ஷிபாஷையில் தேர்ந்தவனுதலால் அவைகளே கேட்டுக் கண்ணுறங்காமல் விழித்துக்கொண்டிருந்தான். பெண் புருவானது தன்நாயகனே நோக்கி, நாம் எவருமில்லாத இக்கானகத்தில், கூடு கட்டி வசிக்கின்றோம். நம்முடைய, இருப்பிடத்தை வேடுவர்களாலும் அறியமுடியாது. அப்படியிருக்க, இன்றையதினம் எவனே, நம் மரத்தின் கீழ் படுத்திருக்கிறனே. நமக்கு ஏதாவது தீங்கு நேரிடுமோவென்று பயந்து கேட்டது.

ஆ.—கண்மணி. அவன் வேடுவனல்ல. நம்மைப் பிடித்துச் செல்லவும் வரவில்லே. நீ பயப்படவேண்டாம்.

பே.—ஆனல், அவன் யார்.

ஆ.—ஆஹா, அவனுடைய பிறப்பு, மிகவும் துன்பகரமானது. நீயேன் அதைக் கேட்கின்றய்.

பே.—என் பிரிய கணவனே! எனக்கு இன்று நித்திரை வரவில்லே. அவன் சரிதையைக் கூறினல் கேட்ட பிறகு தூங்குவேன். தயவுசெய்து சொல்லுங்கள்.

ஆ.—ப்ரியே. அனலதைக் கூறுகிறேன். கேட்பாய். இவன் சகுந்தலாபுரியின் அரசகுமாரன். விதிவசத்தினல் இந்த மாதிரி அனதையாக விருக்கின்றன்.

பே.—ஆஹா! இஃதென்ன ஆச்சரியம். ராஜகுமாரனும் இப்படி அனதையாய் பரதேசிபோலிருப்பானே?

ஆ.—காதலியே. நீயென்ன மிகவும் பேதையாக விருக்கின்றய். தனிகன் பரதேசியாவதில்லேயா, பரதேசி குபேர சம்பத்துடையவனுக ஆவதில்லேயா. இதென்ன அதிசயம்.

பே.—ஆனல், நானிப்பொழுது அரசகுமாரன் வறுமையினலிருப்பதைப் பார்த்தேன். பரதேசி, எப்படி தனிகனுவான்

ஆ.—பெண்மணி. நான் ஒரு கதை கூறுகின்றேன். கவனமாகக் கேள். ஒரு தேயத்தில் ஒரு தனிகன், தன் மூதாதைகள் வைத்த வீடு, இருப்பிடம் காணுமல் மற்றோர் மாளிகையை விலைக்கு வாங்கி, இடித்துத் தனனிச்சைப்படி, ஏராளமான, திரவியம் செலவிட்டு, பெரிய பங்களாவாகக் கட்டிமுடித்துக் கிரஹப்ரவேசம் செய்து, விருந்துகள் முதலியன நடப்பித்து, அன்றையதினம் இரவு, தன் மனைவி மக்களுடன் புதிய சயன அறையில் படுத்திருந்தான். அப்பொழுது நள்ளிரவில் "விழட்டுமா, விழட்டுமா" என்று சப்தம் பிறந்தது. அதைச் செவியுற்ற தனிகன், ஒகோ இதென்ன மோசம்; வீடு நம்முடைய தலையில் விழட்டுமா என்று கூறுகின்றதென்று, பயந்து, மனைவி மக்களையுமிட்டுக்கொண்டு மறுபடியும் பழைய வீட்டிற்கே சென்றுவிட்டான். பிறகு நாலைந்து தினம், தான் மாத்திரம் வந்து சயனித்தான். தினசரி அந்த சப்தமே கேட்டது. அதைக் கவனித்த தனிகன் மிகவும் வருத்தமுற்று, அந்த மாளிகையில் பேய் வாசம் செய்கிறதென்று நினைத்துக் கதவையடைத்துவிட்டு, தானும் வருவதை நிறுத்திவிட்டான். நன்றாய் கேட்பாய் கண்மணி.

பெ.—அப்படியே நாதா. கதை நன்றாயிருக்கிறது.

ஆ.—பிறகு வெகு காலங்கழித்து ஒரு பரதேசி தன் மனைவி மக்களுடன், மழையினால் மிகவும் பீடிக்கப்பட்டு இருப்பிடமின்றி அலைந்து கடைசியில், அத்தனிகனையணுகி, ஐயா, உம்முடைய பாழ் மனையில் வசித்துவருகிறேனென்று கெஞ்சிக் கேட்க, அவனும் இவன் பரிதாபத்திற் கிணங்கி, வசிக்கும்படியாக உத்தரவளித்தான். பரதேசி, தனிகனை வாயாரப் புகழ்ந்து, மனமார வாழ்த்தித் தன் பெண்டு பிள்ளைகளுடன் பாழ்மனையில் குடியேறினன். அன்றிரவும் விழட்டுமா, என்னும் சப்தம் பிறந்தது. அதைக்கேட்ட பரதேசி, ஒகோ, இதனால்தான் தனிகனிங்கு வசிக்கவில்லைபோலிருக்கிறது. நல்லது வீடு நம்முடைய தலையில் விழுந்துவிட்டால் இன்றுடன் நம் தரித்திரம் நீங்கி உயிர்போய் விடுமென நினைத்து தன் வறுமையின் கொடுமையை

னேத்துத் தைரியத்துடன் "விழுந்துவிடு" என்று உரத்துக் கூறி ஞன். உடனே, அவ்வீட்டின் ஓர் மூலேயில் அநேக பவுன்களும், மோகராக்களும், கல கலவெனக் கொட்டின. அதைக்கண்டு ஆச்சரியமடைந்த பரதேசி உடனே தனிகனில்லம் சேர்ந்து, நடந்த யாவற்றையும், ஒளியாமல் உள்ளபடியுறைக்க, அதைக் கேட்ட தனிகனும் அதிசயங்கொண்டு ஓடிவந்து இவைகளைக் கண்ணுற்று, ஐயா இத்திரவியங்கள் உனக்குச் சேரவேண்டி யிருந்ததினுல் உனக்கு இந்த புத்தியும் எனக்கு அந்த மாதிரி புத்தியும் தோன்றின. உன்னுடைய சொத்தானதினுல்தான், நான் இவ்வளவு காலம் பூட்டிவைத்திருந்தேன். அதனுல் உன் னேச் சேரவேண்டியதென்று கூறி, அந்த க்குவியலேயும், பங்களாவையும், பரதேசிக்குச் சொந்தமாக அளித்துவிட்டுச் சென்றுன். பரதேசி பணக்காரனுகிச் சுகமாய் வாழ்ந்துவந்தான் அதேமாதிரி **அதிர்ஷ்டம் அவரவர் வினேயின்படித்தான் நடக்கும்** கேட்டாயா, என்று கூறிற்று.

பெ.—நாதா! மிகவும் உண்மையான கதையாக விருக்கின் றது. என்னுடைய புத்தியும் தெளிவடைந்தது. இவ்வாலிப னுடைய விபத்துகள் நீங்க இன்னமெவ்வளவு காலம் பிடிக்கும்.

ஆ.—இவனுக்கின்னுமனேக ஆபத்துகளிருக்கின்றன. ஆனுல் நம்முடைய வனத்துச் சற்குருவால் விலகிவிடும். கூடிய சீக்கிரம், நாடு நகரடைந்து பெண்டு பிள்ளேகளுடன் வாழ்வான்.

பெ.—அப்படியா, நல்லது. தங்களுக்குக் கிவ்வளவு நேரம் ஸ்ரமமளித்தேன். வெகுநேரமாகிவிட்டது, நித்திரை புரிவோ மென இருபுறுக்களும் மௌனம் பூண்டன. யாவற்றையும் கவனித்துப் படுத்திருந்த சந்திரன், ஆஹா, இந்தப்பறவைக ளின் புத்திக் கூர்மையையும், நேசத்தையும் நான் என்னவென்று கூறுவேன். என்ன ஜன்மமெடுத்தாலும் இப்படியல்லவோ இருக்கவேண்டும். நாம், மானிட ஜன்மமெடுத்தும், யாதொரு பயனுமின்றித் திரிகின்றோம். இன்னும் என்ன இடையூறுகள் நேரிடப்போகிறதோ, எது வந்தபோதிலும் கடவுளும், தபோ நிதியான குருவும் தான் துணேயென்று கூறித் துயிலிலாழ்ந்த

னன். அங்கு வாசஞ்செய்த கருநாகமொன்று வெளிக்கிளம்பிச் சந்திரனுடலை சுற்றி வளைத்துக்கொண்டது. ஆனால் நற்காலபலனாய் கடிக்கவில்லை. விடியும் சமயமாகிவிட்டதனால் அப்புலிமான், இந்தப் பாபங்களையெல்லாம் காணச் சகியாதவன்போல் மறைந்துவிட்டான். ஆதித்தனோ வென்றால், வெளிச்சமில்லாவிடில் வாலிபன் துன்புறுவானென நினைத்துத் தன் கிரணங்களைப் பரப்பி மெதுவாய் எழுந்தான். பக்ஷி ஜாலங்கள் யாவும் சந்திரன் தன்மீதுள்ள ஆபத்தையும் எண்ணாமல் தூங்குகிறானேயென்று பச்சாதாபமடைந்து கா, கூ வென்று சப்தித்தன. சந்திரனும் மெல்லெனக் கண்விழித்துத் தன் தேக பாரத்தையறிந்து நாகத்தைக் கண்டு பயந்து, உடல் பதறி, ஆஹா, புறாக்கள் கூறியதுபோல் நம்முடைய விபத்து உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கிவிட்டது. என் குருவே, தங்களை விட எனக்கு வேறு எவருமில்லையே என்று கூறிப் புலம்ப, அச்சமயம் அகஸ்மாத்தாய் ஆகாயத்தில் வட்டமிட்டக் கருடப் பறவையைக்கண்டு அஞ்சின சர்ப்பம் சந்திரனைக் கட்டியிருந்த உடலை இழுத்துக்கொண்டு வெகு வேகமாய் புற்றுக்குள் நுழைந்துவிட்டது. பாலகன் மனதில் குருவை தியானித்துத் தெண்டனிட்டு எழுந்து கொஞ்சதூரம் சென்று, அங்கு ஓடிய காட்டாற்றில் கை கால் சுத்திசெய்து, பல் விளக்கி விருக்ஷங்களிலுள்ள கனிகளைப் பறித்துப் புசித்துத் தண்ணீரருந்தி தாக விடாய் தீர்ந்து, தன்னுடைய நகரத்தைத் தேடவேண்டி, தேசங்கடோறும் சென்று விஜாரித்துக்கொண்டே வந்தான்.

---

## 6-ம் அத்தியாயம்.

கானகத்தில் நடந்துவந்த மேனகா, எங்கு பார்த்தாலும் முட்செடிகளும், பாம்புப் புற்றுகளும், காட்டுச்செடி கொடி மரங்களும் அடர்ந்து கன்னங்கரேலென வளர்ந்திருப்பதையும் துஷ்டகுணமுடைய வனமிருகங்கள் அங்குமிங்குமாய் வெகு ஆர்ப்பாட்டத்துடன் சஞ்சரிப்பதையும் கண்டு பயந்து மிகவும் பீதியுடன் விதியை நொந்து வழி நடந்துகொண்டிருக்கையில் காலக்கொடுமையினுல் ஒரு புலி மிகவும் அகங்காரத்துடன், மேனகாவைப் புசிக்க வேண்டுமென்ற எண்ணங்கொண்டு, கர்ஜனை செய்து, பின்னுல் தொடர்ந்து வேகமாய் ஓடி வந்தது. அதைக்கண்ட மேனகா, திகிலடைந்து வேகமாய் ஓடியும் பயன் படாமல் புலி சமீபித்துவிட்டது. கால்களோ வலி பொறுக்க மாட்டாமல் தவித்தன; மார்பு பட படவெனத் துடித்தது. மனதிலுள்ள பயத்தினுல் மூர்ச்சையடைந்து கீழே சாய்ந்து விட்டாள். புலி இன்னும் சமீபத்தில் வந்ததும் தற்செயலாய் ஓர் துப்பாக்கிக் குண்டு அதன் மீது விழ அப்படியே அது உயிரிழந்துவிட்டது. அச்சமயம் ஒரு வாலிபன் மேனகாவினருகில் வந்து அவள் மூர்ச்சித்திருப்பதை யறிந்து, தன் கையில் வைத்திருந்த தண்ணீரால் முகத்தைக் கழுவிவிட்டுச் சில கனிவர்க்கங்களை அவள் பக்கலில் வைத்துவிட்டு உடனே ஓடி ஒளிந்துவிட்டான். (அவன் யாரெனப் புலப்படவில்லை.)

சற்றுநேரத்தில் மூர்ச்சை தெளிந்தெழுந்து உட்கார்ந்த மேனகா, ஹே கருணாநிதே! ஆபத் பாந்தவா!! ஸ்ரீயஃபதி, சக்ரபாணி, பத்மநாபா, அனாத ரக்ஷகா, ஹா! கிருஷ்ணா!! துவாரகா வாசி யென்றலரிய த்ரௌபதிக்கும், ஆதிமூல மென்றலரிய யானைக்கு மபயமளித்த என் ஐயனே! காதலித்த கணவனும் பிரிந்துவிட்டார் உற்றார், உறவினர் பிதா, தாதி யாவரையும் பிரிந்து நடுக்கானில் கண் கலங்குமென்னை ரக்ஷிக்கவேண்டும். நான் எங்கு சென்று என் நாதனைத் தேடுவேன். அவர் எங்கு

தவிக்கின்றரோ. ஹோ, சந்திரா, என்ன செய்வேனென்று துக்கித்துத் திரும்பினள். திரும்பினதும், புலி, மார்பில் குண்டு பாய்ந்து இறந்திருப்பதையும், பழங்கள் வைத்திருப்பதையும் கண்டு ஆச்சரியமடைந்து, கடவுளே, நின்பெயரும் பொய்க்குமா. அனாதைக்குத் தெய்வம் துணையென்பதை ப்ரத்யக்ஷமாய் கண்டு கொண்டேன். நான் வரும்பொழுது இக்கனிகளைக் காணேமே. இதை யாராவது கள்வர்கள் வைத்திருப்பார்களோவெனப் பல விதமெண்ணி எழுந்து நாலா பக்கமும் சுற்றிப்பார்த்தாள். எவரையும் காணவில்லை. பிறகு எப்படியிருந்தாலுமிருக்கட்டுமென நினைத்துக் கொஞ்சம் புசித்துவிட்டு மேலும் நடந்தாள். வழியோ தலையுமில்லை. இன்னவழி போவதென்பதை அறியாமல் தன் மனப்போக்கின்படி நடந்துவருகையில் புஜங்கன், சில வேடுவர்களுடன் வேட்டையாட வந்திருப்பதைக் கண்டாள் உடனே வயிறு பகீரென்றது. என்ன செய்வாள் பாபம், அவனுமிவளைப் பார்த்துவிட்டான். ஆனல் மேனகா, உருமாறி உடல் மெலிந்து பரதேசிபோலிருந்தமையால் அடையாளம் தெரியாமல் யாரோ, பெண்மணியென நினைத்து ஆஹா! இவள் ரம்பையோ, ஊர்வசியோ, வனதேவதையோ என்று எண்ணித் திகைத்துச் சமீபத்தில் வந்து பெண்மணி, நீ யார், என் இக் கொடுங் கானகத்தில் தனிமையாக நிற்கின்றாய் என்றான். அச்சம்மேலிட்ட மேனகா, பேச நாவெழாமல் மௌனமாய் நிற்க, மறுபடியும் நீ யாரம்மா என்று வினவினன். அவன் தன்னைக் கண்டுகொள்ளவில்லையென்பதை அறிந்த மேனகா, கொஞ்சம் தைரியம் பிறந்து ஐயா, நான் ஒரு பரதேசி என்றாள்.

பு—அப்படியா, ஐயோ, பாபம், துஷ்டமிருகம் வாழுங் கானகத்தில் ஒரு, பெண்பிள்ளை தனியாக வாழ்வது, என்ன கொடுமை. அம்மணீ, நீ என்னுடைய நகரிற்கு வா, குறையின்றி வாழலாம்.

மே.—ப்ரபுவே, தங்களைப் பார்த்தால் ஒரு ராஜகுமாரனைப் போல் காண்கிறது. நானே பரதேசி, எனக்கு அரண்மனையில் என்ன வேலை.

பு.—(வஞ்சக எண்ணத்துடன்) அம்மணீ, தாங்களென்னுடன் வரக்கொஞ்சமும் அஞ்சவேண்டாம். என் சகோதரியைப்போல் பாதுகாப்பேன். இஃதுண்மையென மேனகாவும், இவனே நம்மையறியவில்லை, மிகவும் பக்ஷமாய் பேசுகிறான். புஷ்பாபுரி சென்றாலாவது, சந்திரனைக் காணலாகாதா, என்ன செய்யலாமென்று யோசனை புரிந்தாள்.

பு.—தாயே, யாது யோஜனை.

மே.—நல்லது தங்களிஷ்டப்படியே வருகிறேனென்று கூற, புஜங்கன் மனதிலடங்கா மகிழ்ச்சிகொண்டு, தன்னுடைய குதிரையை அவளுக்களித்து, தான் மற்றோர் புரவியின் மீது ஆரோகணித்துப் புஷ்பாபுரியையடைந்து அங்கு எவரும் மேனகாவைக் காணாதபடிக்கு மேன்மாடியில் கொண்டுவிட்டு, பெண்ணே, நீ இங்கேயே இரு. நான் சென்று ஆகாரவகைகள், அனுப்புகிறேனென்று கூற மேனகா, ஐயனே என்க்கு இவ்வளவு பெரிய அரண்மனை எதற்கு. ஏதாவது ஒரு சிறிய அறை கொடுத்தால் போதுமானது என்று வினயத்துடன் மொழிந்தாள்.

பு.—அம்மணீ, இதற்கென்ன பிரமாதம்; நீங்களிவ்விடத்திலேயே இருங்கள். நான் சென்று வருகிறேனென்று கூறி, உடனே கீழே சென்று ஒரு தாதியிடம் தங்கத் தட்டில் அறுசுவையுண்டிகளும் தயார்படுத்தி மேனகாவினறைக்கு அனுப்பினான். அவனுடைய கபடத்தை அறியாத மேனகா, வெளிவேஷமான அவன் சொல்லை நம்பி, ஆஹா புஜங்கனுக்கும் இவ்வளவு புத்தி வந்ததாவென்று சந்தோஷித்துத் தானும் ஆகாரத்தைக் கண்டு வெகு நாட்களானதினால் கொஞ்சம் புஜித்து விட்டுத் தாதியை அனுப்பிவிட்டு, அங்குள்ள கதவைத் தாளிட்டு மூடி நடந்த அலுப்பினால் மெய்மறந்து தூங்கிவிட்டாள். மறுதினமும் தாதி வந்து இவளுக்கு வேண்டிய உபசரணைகள் செய்தாள். புஜங்கன் வரவேயில்லை. இதுவும் நம் நற்காலம் தான் என்று எண்ணி மகிழ்ந்தாள். அன்றிரவும் சாப்பிட்டுக் கதவைத் தாளிட்டுப் படுத்திருக்கும் சமயத்தில், புஜங்கள் ப்ன்

னீரில் ஸ்நானஞ்செய்து, சுகந்த பரிமளங்களெல்லாம் பூசிக்கொண்டு உயர்ந்த உடை தரித்து ஆபரணங்கள் பூண்டு ஒரு தட்டில் ஓடோ மோகினி, டில்பஹார், லீலா, அம்பர், ரோஸ் முதலிய சென்ட் புட்டிகளும் வாசனைச் சந்தனமும், புஷ்பச் செண்டுகளும், விலையுயர்ந்த புடவை, ரவிக்கைகளுமெடுத்துக் கொண்டு மேனகாவினறைக்கு வந்து கதவைத் தட்டினான். உடனே அவள் யாரென்று வினவ, அம்மணீ, நான் தான் உங்களைக் காணவந்தேனென்று கூற, அவளும் யாதொரு சூழ்ச்சியையு மறியாமல் ஏதோ நம்மைக் காணவந்திருக்கிறானென்றெண்ணிக் கபாடத்தை நீக்கினாள். அவன் உட்புகுந்ததும் அவனுடைய ஆடம்பரங்களைக்கண்டு, அச்சங்கொண்டு, மனம் பதைத்து, மெய் சிலிர்த்துச் சட்டென்றெழுந்து ஒரு ஓரமாகப் போய் நின்றாள். அதைக்கண்ட புஜங்கன் அம்மணி, நீ ஏன் என்னைக்கண்டு நடுங்கவேண்டும், உங்களுடைய உடைகள் மாசுபடிந்திருப்பதால் இவைகளை யெடுத்துவந்தேன், களிப்புடன் ஏற்றுக்கொண்டு, தரித்துக்கொள்ளுங்களென்று கூறினான்.

மே.—ஐயா, நான் இந்த உடைகளைத்தவிர, வேறு உடை தரிப்பதில்லையென்று பிரதிக்ஞைசெய்து கொண்டிருக்கிறேன். ஆதலாலவைகள் எனக்குவேண்டாம். மிகவும் நன்றி செலுத்துகிறேன். அகாலமான இந்த இரவில் என்னுடன் சம்பாஷித்தால் பார்ப்பவர்கள் ஏதாவது ஏளனம் செய்வார்கள். தயவுசெய்து சென்று வாருங்கள்.

பு.—கண்மணி, என்னைத்தவிர இந்த அரண்மனையில் எவரும் வரமாட்டார்கள். அதைப்பற்றி நீ பயப்படவேண்டாம். என் பக்கலில் உட்கார், வா.

மே.—என்ன இது. என் சகோதரனைப்போன்ற நீங்களிந்த மாதிரி பேசுவது அழகல்ல.

பு.—வஞ்சிக் கொடியே, நான் உன்னைப் பெண்டாளநினைத்து அழைத்து வந்தேனேயல்லாமல் வேறல்ல.

மே.—மனதில் பொங்கியெழுந்த கோபத்தைத் தணித்துக்கொண்டு ப்ரபூ, தங்களைப்போன்ற அரசகுமாரர்களும் பொய்

புகலலாமா. ஆனல் நீங்களென்னை வஞ்சகமாய் பேசியா அழைத்து வந்தீர்கள். வீண் எண்ணமெதற்கு.

பு.—என் கிளியே, நான் அப்படிக் கூருவிடில் நீ என்னுடன் வரச் சம்மதிக்கமாட்டாய். அதனலப்படிக் கூறினேன்; கால தாமதம் செய்யாமலென்னைக் கட்டியணைந்துகொள்வாய்.

மே.—இனி இவனிடம் நல்லவார்த்தை புகலுவது தகா தென நினைத்து அடே பாபி, வஞ்சகம்செய்த நாசகாலா, துன் மார்க்கனே, சண்டாளா, வீணகத் துர் எண்ணங்கொள்ளாதே இவ்விடத்தை விட்டுச் சென்றுவிடு மரியாதையுடன்.

பு.—என் தங்கமே, நீ எவ்வளவு திட்டினபோதிலும் அது எனக்கு ஆசிர்வாதம்; என்மேல் கோபங்கொள்ளாமல் என தருகில் வா. என் விரகதாபத்தைத் தணிக்கும் வன மயிலே; காமத்தைப் போக்கும் குயிலே, மயிலே, மடவன்னமே; மோகத்தை நீக்கும் மோகனங்கி; என் இன்பத்தைத்தரும் இளங் கிளியே என் இன்பக் கண்ணுட்டி, காதல் மனையாட்டி, செல்வச் சீமாட்டி இன்னும் தயவு வரவில்லையா என் கண்மணி, பெண் மணி என்று பைத்தியம் பிடித்தவனைப்போல் வாய்க்கு வந்தபடி யெல்லாம் பிதற்றினன்.

மே.—அடே த்ரோகி, உன் வாழ்வை வீணகப் போக்கிக் கொள்ளாதே. உன் பெண்டு, பிள்ளைகளின் சுகத்தையாவது நாடு. வீணக அழிந்துவிடாதே, சீக்கிரம் வெளியில் சென்று விடு.

பு.—அடியே, நான் உன்னைத் தொந்திரவு செய்யக்கூடா தென நினைத்தேன். அது உனக்குப் பிரியமில்லை. நான் எதற் காக உன்னை நடுக்காட்டிலிருந்து அழைத்துவந்தேன். உன் மோடி, கீடியெல்லாம் என்னிடம் செல்லாது. சீக்கிரம் வந்து எனக்குப் பணிந்துவிடு. வீண் தொந்திரவுவேண்டாம்.

மே.—அடே, படுபாவி, உன்னைப்போன்ற கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டைவிடக் கடும்புலி வாழுங் காடு மிகவும் நன்று. இந்த க்ஷணத்திலேயே என்னை மறுபடியும் கானகத்தில் கொண்டு விட்டுவிடுவீர்.

பு.—அப்படியா, நான் எதற்காகக் கொண்டுவிடுவேன். என் கையிலகப்பட்ட புறுவை விட்டுவிடுவேனென்று நினைக்க வேண்டாம். பத்திரமான கூண்டில்தான் வைத்திருப்பேன். சீக்கிரம் எனக்குக் கீழ்ப்படிந்துவிடு.

மே.—அது ஒருக்காலும் முடியாது.

பு.—முடியாதா வென்று கூறிக் கோபாவேசத்துடனெழுந்து பலாத்காரம்செய்ய வருகையில் அங்கிருந்த ஜன்னலின் வழியாக ஓர் சிறு கல் புஜங்கன்மீது விழுந்தது. அவன், அதன் வலியைப் பொருக்கமாட்டாமல் கல் எவ்விதமாய் விழுந்ததென்பதை அறிய ஆவல்கொண்டு, கண்மணி நான் சென்று அரை நிமிடத்தில் வருகிறேன். அதற்குள்ளாவது உன் மனதைத் திடப்படுத்திக்கொள்வாயென்று கூறிச் சென்றுவிட்டான். அவன் சென்றதுதான் தாமதம் உடனே அந்தக் கல் விழுந்த வழியாகவே, ஒரு சிறிய கடிதச் சுருள் விழுந்தது. அதைப் படிக்க எண்ணங்கொண்டு மேனகா பிரித்துப்பார்க்க அதில்

நீ அவனுக்குக் கீழ்ப்படிந்ததாக இணங்கி அபிநயம்செய்து
5 நாள் தவணை கொடு. அதற்குள் உன்னை மீட்டுவிடுகிறேன்.
இஃதுண்மை; அசட்டை செய்யாதே. உண்மை. உதவியாளி.

என்று வரையப்பட்டிருந்தது. மேனகா ஒருவாறு தைரியங்கொண்டு கடிதத்தை மடித்து மடியில் வைத்துக்கொண்டு, ஆஹா, அரண்மனையில் சிற்றன்னையிடமிருந்து தப்பிக் கள்வரிடம் சிக்கினோம்; அவர்களிடமிருந்து தப்பிப் புலியினிடமகப்பட்டோம். அதற்கும் தப்பி நாகத்தையொத்த கோடியோனை இந்தப் பாபியிடம் அகப்பட்டேன். கடவுள் எப்படி அந்த ஆபத்துகளினின்றும் தப்ப வைத்தாரோ அப்படியே இதினின்றும் மீட்டுவிடுவார். என்னே! இப்படிப் பெண் ஜென்மமெடுத்தேன். என்ன பாபம் செய்தேனோ என் காதலன் எங்கு சென்று எவ்வித ஆபத்தில் தவிக்கின்றாரோ. என்ன செய்வேனென்று சந்திரனை நினைத்துக் கண்ணீருதிர்த்தாள். அச்சமயம் வெளியில் சென்றிருந்த புஜங்கன் எவரை

யும் காணவில்லையென்று கூறிக்கொண்டே உள் நுழைந்து கண்ணே எவ்வித முடிவிற்கு வந்தாய் நல்ல வாக்காகக் கூறுவாய் என்றான்.

மே—ப்ரபூ, எப்பொழுது நான் தங்களையடைந்தேனே அப்பொழுதே உங்களுக்குச் சொந்தமாகிவிட்டேன். இனி எனக்கு நீங்கள்தான் துணை.

பு.—என் தங்கக்குட்டியே! என் கற்கண்டுக் கட்டியே!! இப்பொழுதுதான் என் ஜன்மம் சாபல்யமாயிற்று. எதோ என்னிடம் வந்து ஒரு முத்தமீவாய்.

மே.—தாங்களிவ்வளவு ஆத்தரமடைவது தகாது. எனக்கு ஒரு இடையூறு நேர்ந்திருக்கிறது.

பு.—கண்மணீ, உனக்கும் இடையூறு உண்டோ. அதைச் சீக்கிரமாய்க் கூறுவாய். க்ஷணப்பொழுதில் நிவர்த்திசெய்கிறேன்.

மே.—இளவரசே தாங்களென்னை மன்னிக்கவேண்டும். தயவுசெய்து ஐந்து நாள் விடை தரவேண்டும்.

பு.—பொன்மயிலே, எதற்காக அவ்வளவு நாள் தாமதம்.

மே.—நான் மாதவிடாயாகி யிருப்பதால் புருஷர் முகத்தைக் காணக்கூடாது, அதனால் 5 நாட்கள் செல்லவேண்டும்.

பு.—ஆனால் சரி. உன் பிரியப்படியே நடக்கின்றேன். எனக்கு 5 நாளும் 5 யுகமாகவிருக்கும். எனக்கு வந்துகொண்டிருந்து போக அனுமதி ஈவாய், தேனே!

மே.—அடடா. அதுதான் தடை. என்ன ப்ரமாதம். 5 நாட்கள்தானே. இது ஒரு கஷ்டமா.

பு,—அப்படியா. அதையும் உனக்காக வெகு ப்ரயாசையுடன் எற்றுக்கொள்ளுகிறேன். உனக்குத் தேவையானவைகளையெல்லாம் தடையின்றிப் பெற்றுக்கொள். நான் சென்று ஆறும் நாட் காலையிலேயே வந்துவிடுகிறேன். சம்மதமா.

மே.—அதற்குத். தடையேயில்லை. எனக்கு ஆகாரம் வேண்டும்போது நானே கேட்கிறேன். தாங்களனுப்பவேண்டாம்.

பு.—அது முடியவே முடியாது. நீ அரைநிமிடம்கூடப் பசித்திருந்தால் என் உயிர் உடனே நீங்கிவிடும். உன் கட்டளையின்படி நான் வராமல் தாதியிட மனுப்புகிறேன்.

மே.—நல்லது. உங்களிஷ்டப்படியே செய்யுங்கள், போய் வாருங்களெனப் புஜங்கன், என் கண்ணே, ஆறாவது தினம் காலை, உன் மதிமுகத்தைக் காண்பேனென்று கூறிச் சென்றுவிட்டான். மேனகாவும், யமனிடம் சென்ற உயிர் மறுபடி வந்ததுபோல் சந்துஷ்டியடைந்து, நம்மை ஆபத்துக்களினின்றும் நீக்கி ஆதரிக்கும் புண்ணியவான் எவரோ என்று எண்ணமிட்டு நித்திரை போயினள். இவ்வாறு இரண்டு நாட்கள் கழிய மூன்றாவது நாள் மாலை மேனகா, ஆஹா மூன்று நாட்கள் சென்றனவே. இன்னமிரண்டு நாட்களும் கழிந்தால் அந்தப் பாவி வந்துவிடுவானே என்ன செய்வேன். அந்தச் சமயத்திலுதவி புரிந்த உபகாரி வேறொன்றும் கூறவில்லையே. அவர் வராவிடில் எப்படித் தப்பித்துச் செல்வதென்று, ஏங்கி விஜாரப்படுகையில் அன்றைபதினம் வந்ததுபோலவே, மற்றொரு கடிதச் சுருள் வந்து விழுந்தது. அதைக்கண்டு களிப்பெய்தி ஆவலுடன் பிரித்துப்படிக்க அதில்,

> இன்றிரவு உன்னுடைய அறையில் ஓர் மெல்லிய பட்டுக் கயிறு வந்துவிழும். அதை நீ மெதுவாக இழுத்துக்கொண்டால் அதன்பின் நூல்கயிறு வரும். அதையுமிழுத்துக் கொண்டால் பருமன்கயிறும், அதன்பின் நூலேணியும் வரும். அதன் முனையை நன்றாக ஜன்னல்கம்பியில் கட்டிவிட்டு அதன்வழியாக மெள்ள கீழே இறங்கிவிடு. நான் கீழேநின்று உனக்கு யாதொரு ஆபத்துமின்றிக் கவனித்து வருகிறேன். மறக்க வேண்டாம். உன் உதவியாள்.

என்று வரையப்பட்டிருந்தது. அதைக்கண்ட மேனகா, மகிழ்சியடைந்து, ஆஹா இப்பேர்பட்ட உத்தமபுருஷன் யாரோ தெரியவில்லையே. அவருக்கு நான் யாது கைமாறு செய்யப்போகிறேன் என்றுஏங்கி, இரவுவந்த ஆகாரத்தைப் புசித்துத் தாதியை யனுப்பிவிட்டுக் கதவைத் தாளிட்டுக் கயிற்றின்

வரவை எதிர்பார்த்தனள். ஊர்ச் சந்தடிகள்யாவும் அடங்கின பிறகு ஒரு பட்டுச்சுருள் விழுந்தது. அதைக்கண்ட மேனகா ஆநந்தித்து அதை மெதுவாக இழுத்துக்கொள்ள நூல்கயிறும், அதன்பின் பருமன்கயிறும், அதன்பின் நூலேணியும் வந்தன. அதை நன்றாயிறுக்கி ஜன்னலின் கம்பியில் கட்டிவிட்டுக் கம்பியைப் பேர்த்தெடுக்க ஆதாரமில்லையே என்றுவருந்திச் சுற்றிப் பார்க்கையில் நூலேணியின் பக்கத்தில் உள்ளகயிற்றில் சிறிய அரமும், ரம்பமும்கட்டியிருந்ததைப் பார்த்து தைரியமடைந்து, அவைகளின் உதவியைக் கொண்டு, இரண்டு கம்பிகளைப் பெயர்த்துவிட்டு, அதன் வழியாக நூலேணியைப் பற்றிக் கொண்டு கீழேயிறங்கி வந்தனள். அவள் கீழே வந்துசேர்ந்ததும், அங்கு நின்றுகொண்டிருந்த கூலியாள் ஒருவன் சடேரென நூலேணியை இழுத்துச் சுருட்டிக் கொண்டு அம்மணீ, நீங்களிங்கு அரை நிமிடமும் தாமதிக்காமல் உடனே சென்று விடுங்களென, மேனகா என்னய்யனே! உயிரையளித்த மெய்யனே! உண்மையில் துய்யனே!! தாங்கள் யாரோ தெரியவில்லையே, அதைத் தயவுசெய்து கூறவேண்டும். உங்களைப் போன்ற பரோபகாரியை நான் எங்கும் கண்டதேயில்லை என்றாள்.

கூ.—அம்மணி நான் இந்த அரண்மனையில் கூலிவேலை செய்பவன் என்னுடைய எஜமானனான இளவரசன் மிகவும் துர்குணி. அதனால் அவ்வன் உங்களுடைய கற்பையழித்து விடுவானென்று எனக்குத் தெரியும். தங்களைப் பார்த்ததில் மிகவும் பதிவிரதையென்று எனக்குத் தோன்றினதினால் உங்களை மீட்கவேண்டுமென்ற எண்ணம் எனக்கு உதித்தது. இதுதான் சங்கதி. தாயே! இனிமேல் தயவுசெய்து ஒன்றும் உரையாடாமல் சென்று விடுங்களென, என்னைரக்ஷித்த ப்ரபுவே! தங்களுத்தரவின்படியே நான் சென்றுவருகிறேன். மிகவும் வந்தனம். என்றுகூறி, இருட்டிலே தனியாக நடந்து பலதெருக்களைக் கடந்து, மிகவும் இருளாயிருந்ததினால் சற்றுநேரம் ஒரு வீட்டுத் திண்ணையில் படுத்து உறங்கினாள். பிறகு அதிகாலையிலெழுந்து புஷ்பாபுரியின் கோட்டைவாயிலைக் கடந்து, அங்குசென்ற

ஒரு சாலையின் வழியாகவே சென்றனள். அந்தச் சாலையில் அநேக மரங்கள் பழங்களடர்ந்து நிறைந்திருந்தன. மேனகாவும் வெயிலின் கொடுமையால் பசிமேலிட்டு அங்கிருந்த தடாகத்திலிறங்கிப் பல்விளக்கிக் கை கால்சுத்திசெய்து, கனிகளைப் பறித்து உட்கொண்டு, சற்றுநேரம் களைப்பாறிப் பிறகு, மேலும் எழுந்து நடந்து கொண்டேவருகையில் வெகு தூரத்திலுள்ள ஓர் பட்டினம் திருஷ்டியில் பட்டது. அதைநோக்கின மேனகா இரவிற்குள் அங்கு சேர்ந்துவிட வேண்டுமென்று எண்ணி, வெகுவேகமாய் நடந்து, இரவு எட்டுமணிக்குள் பட்டினம் வந்துசேர்ந்து தான் கையில்கொஞ்சம் வைத்திருந்த கனிகளைப் புசித்துவிட்டுப் பலவீதிகளைப் பார்த்துக் கொண்டு போகையில் இருள்அதிகரிக்க அங்குள்ள அரண்மனைபோன்ற ஓர் பெரியவீட்டின் வாயிலில்படுத்துத் தன்வினைகளை நினைத்துக் கவலைகொண்டு நெடுநேரம் விழித்திருந்து அதிகாலையில் மெய் மறந்து, துயிலிலாழ்ந்து விட்டனள். பகலவன் இவள் பரிதாபத்தைக் காணவேண்டிக் கிளம்பினான். ஆதித்தனுதித்து வெகு நாழிகையாகியும் மேனகா நடந்தஅலுப்பினால் கண்விழிக்காமல் தூங்கிக் கொண்டிருந்தனள். அவ்வீட்டின் உட்புறத்திலிருந்து வெளியில்வந்த மாதுஒருவள் மேனகா படுத்திருப்பதைக் கண்ணுற்று உள்ளேஓடித் தன் யஜமானியிடம் உரைக்க, உடனே அவள் வெளியில்வந்து மேனகாவின் ரூபலாவண்யத்தையும், அவள்தேகம் மெலிந்துநிரம்பக் களையாயிருப்பதையும் கண்ணுற்று, மனமிளகி, ஆஹா! இப்பேர்ப்பட்ட பெண்மணிகளும் இவ்வுலகிலுண்டோவென்று ஆச்சரியமடைந்து, மெய்மறந்து நித்திரையிலிருந்த மேனகாவை நோக்கிப் பெண்மணீ, பெண்மணீயென்று கூவிஅழைத்தாள். மேனகாவும் திடுக்கிட்டுக் கண்விழித்து அவளைப்பார்த்து, அம்மணீ, தங்களுத்தரவன்னில் இங்குபடுத்திருந்ததற்காக மன்னிக்கவேண்டுமென்றாள். உடனே யஜமானியான **வகுளம்** என்னும் பெயர்ரயுடைய அம்மாது, ஐயோ பாவமே. இதென்னகுற்றம் அம்மா. நீயார். ஏன் பரதேசி போலிருக்கின்றாயென்று வினவ,

மே.—நான் ஒருபரதேசி. நானும், என்கணவனுமாகயாத் திரை செய்துவருகையில் விதியின் கொடுமையினால் இருவரும் பிரிந்துவிட்டோம். பிறகு எனக்குத் திக்குத்திசை ஒன்றும் தெரியாமல் தடுமாறிக் கடைசியில் இந்நகரையடைந்தேன். மிக வும் இருட்டிவிட்டதினால் இங்கு படுத்தேன்.

வ.—ஆஹா! அப்படியா! உன்வரலாறு மிகவும் பரிதாபகர மாயிருக்கின்றது. நீயும் மிகப் பாலைப்பருவமுடையவளாய் காண்கிறாய். அதனால் நீ தனியாகச்சென்று உன் கனவனைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம். ஆதலால் நீ என் வீட்டி லேயே சுகமாயிருக்கலாம். நான், எனதாட்களைக் கொண்டு தேடி, உன்னை உன்கனவனிடம் சேர்க்கிறேன். நீ பயப்பட வேண்டாம். உன் விருப்பமெப்படி யம்மா?

மே.—'சற்று ஆலோசித்து' அம்மணீ! எனக்கு இவ்வளவு உதவிசெய்பவர் எவருமிலர். ஆனால் தங்கள் கிருஹத்தில் ஆட வர்கள் சஞ்சரித்துக் கொண்டிருந்தால் எனக்கு இங்குவசிக்கப் பிரியமில்லை.

வ.—கண்மணீ! நான் தாசிகுலத்தில் பிறந்தவள். எனக்குப் புருஷனிறந்துவிட்டார். 12 வயதில் ஒரு குமாரத்தியிருந்தாள். அவளுமிறந்துவிட்டாள். நான் யாருமற்றவளாகத் துக்கத் துடன் இருக்கிறேன். எனக்கு வேறுஎவருமில்லை. இங்கு யாரும் வரமாட்டார்கள். நீ கவலைப்பட வேண்டாம். சுகமா யிங்கு இருக்கலாம் பெண்ணேயென, மேனகவும் அதற்கிணங்கி தாயே. உங்களிஷ்டப்படியே இருக்கிறேனென்று கூற, வகுளம் ஆநந்தங்கொண்டு மேனகாவை உள்ளழைத்துச் சென்று ஸ்நா னஞ்செய்ய வென்னீர் தயாரிக்கும்படி வேலைக்காரிக்குக் கட் டளையிட்டு, கண்ணே! உன் பெயரென்ன என்றாள்.

மே.—என் பெயர் மேனகா. தங்களின் நாமதேயம் யாதோ? இப்பட்டினத்தின் பெயர் யாதோ?

வ.—மேனகா, நீ மிகவும் புத்திசாலி. என் பெயர் வகுளம். இத்தேயத்தைச் சகுந்தலாபுரி யென்பார்கள். இதைப்போன்ற செழிப்புள்ள நகரம் வேறு எதுவும் கிடையாது, என்று இரு

வரும் இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில், வேலைக்காரி, அம்மா வென்னீர் தயாராகிவிட்டது, என்று கூறினாள். உடனே, வகுளம், மேனகாவை வென்னீர் அறைக்கு அழைத்துச் சென்று அம்மா, மேனகா, நீ குளித்து வருவாய், யென்று தான் வெளியில் வந்து அவளுக்கு வேண்டிய, தங்க ஜரிகையினால் செய்த பட்டாடைகளை வைத்துக் கொண்டிருந்தாள். மேனகாவும் தேகத்திலுள்ள அழுக்குப்போக நன்றாய் தேய்த்துக் குளித்து மின்னல் கொடிபோன்று வெளியில் வந்தாள். அவளுடைய பளபளப்பான காந்தியைக் கண்டு ப்ரமித்த வகுளம் தான் கையில் வைத்திருந்த ஆடைகளை உடுத்திக் கொள்ளும்படி அளித்தாள்.

மே.—அம்மணீ! எனக்கு இவ்வளவு உயர்தர ஆடைகளைத்தரிக்க யோக்யதை இல்லை. எனக்கு இவைகள் வேண்டாம். வேறு ஏதாவது கொடுங்களென்று வேண்டினாள். வகுளம் மிகவும் கட்டாயப்படுத்தி அதே ஆடைகளையளித்தனள். மேனகா அவள் வார்த்தைகளை மீறமாட்டாமல் அவைகளைப் பெற்று உடுத்திக்கொண்டு, ஓர் சக்ரவர்த்தினிபோல் பிரகாசித்தனள். பிறகு யாவரும் போஜனமுண்டு வேடிக்கையாய் உரையாடினர். மேனகாவின் மனதில்மாத்திரம் கவலையே குடிகொண்டிருந்தது. இவ்வாறு உல்லாசமாய் சிலநாட்கள் கழிந்தன. கொஞ்சநாள் சென்றதும் ஒருநாள் வகுளம் தன் தொழிலான வேசிச்செயலைக் காட்டஆரம்பித்து, கண்ணேமேனகா! உன்னுடைய அழகும், வாலிபதசையும் எவ்வளவு அழகாயிருக்கின்றன. இப்போர்பட்ட காலத்தை நீ வீணாகக் கழிப்பது என் மனது ரொம்பவும் சஞ்சலப்படுகிறது. இந்த ஊரையரசாளும் சிற்றரசன் ரொம்ப ரூபவான். சிறுவயதுதான். உன்னுடைய ரூபத்தைக் கண்டால்எவரும் மயங்கிவிடுவார்கள். அதிலும் அந்தசிற்றரசன் உன்னிடம்வர யாதொருதடையும் கூறமாட்டார், என்ன சொல்லுகிறாயென ஆரம்பித்தாள். அதைக்கேட்ட மேனகா, உள்ளம் ஏங்கி, அடடா! என்ன என்விதி!! ஜகதீசா என்றுநினைத்து, அம்மணீ! தாங்கள் வேண்டுமென்று கூறுகிறீரா அல்லது என் மனதை அறிவதற்காக வஞ்சகமாகவா?

என்னை என் கணவரிடம் சேர்ப்பிப்பதற்காகக் கூறினீர்களே என்றாள்.

வ:—இல்லையடி கண்ணே மேனகா. நான் கூறுவது உண்மைதான். இதனால் என்ன கெடுதல், உன் கணவனும் பரதேசி என்றாய், இளவரசனைக் கூடினால் மிகவும் மேன்மையாக வாழலாம். நான் சொல்லுவதைத் தட்டாதே.

மே:—தாயே, போதும், **மானம் பெரிதேதவிர ப்ராணன் பெரிதல்ல;** நான் எங்கேயாவது சென்று இரந்து உயிர்வாழ்கிறேன். என்னைத் தொந்திரவு செய்யவேண்டாம், தாயே.

வ:—அப்படியா, என் கைக்கு வந்தநீ எனக்குக் கீழ்படிந்து தான் ஆகவேண்டும், இன்றைய இரவு நீ கட்டாயம் உடன்படவேண்டும். என் சொல்லை மறுக்கிறாயா என்று கூறிக்கோபாவேசத்துடன் எழுந்து தன் வேலைக்காரியுடன் வெளியில் வந்து கதவுகளைப் பூட்டிக் கொண்டு அரண்மனையை நோக்கி நடந்து விட்டாள். வீட்டில் தனித்திருந்த மேனகா மனம் பதைத்து, ஹா, தெய்வமே, நான் என்ன செய்வேன். எவ்வித கஷ்டத்திற் காளாகுவேன். யாவற்றிலும் இது மிகவும் பெரிதான கஷ்டமாயிருக்கிறதே! ஹேகிருபாநிதே! இதைவிட்டு எப்படி வெளிச் செல்வேன், என் ஐயனே! நாராயணனே! என்னைப் போன்ற ஜன்ம மெடுத்த மனிதரும் இப்பூவுலகிலுண்டோ! என் கருணாநிதியே! முன் வந்த ஆபத்துக் களிலெல்லாம் மனிதர் மூலமாய் வந்து அருளிய மகானுபாவா! ருக்மணி மனோகரா! சீத மனவாளா! யாருமற்ற அபலையான என்னை மானம்போகாமல் காக்கவேண்டும். துரௌபதிக்குத் துயிலளித்த துய்யனே! பரந்தாமா! என்ன செய்வேனென்று ஏங்கி, ஜன்னலின் வழியாகத் தெருவை நோக்கினாள். அச்சமயம் அங்கிருந்த ஒரு பெரியவர் நீ யாரம்மா. ஏன் புலம்புகிறாய். நீ உரைத்த யாவற்றையும் நான் கேட்டிருந்தேன். இவ்விடத்திலிருந்து நீ இவ்வளவு மனங்கலங்குவதைவிட தப்பிப் போவதே மேல் என்று சாந்தமாகக் கூறினார். அதைக்கேட்ட மேனகா சிறிது ஆறுதலடைந்து ஐயா நீர்மொழிவது உண்மைதான். நான் எப்

படி தப்பிச் செல்வேன். வழியில்லையே என்று வாட்டத்துடன் பகன்றாள்.

பே—அம்மணி அதற்குத் தாங்கள் கவலைப்பட வேண்டாம். என்னிடம் சில திரவுகோல்கள் உள்ளன. அவைகளினுதவியால் திறக்கிறேன். அது உமக்குச் சம்மதிதானா?

மே.—பரோபகாரியே! இந்தச்சமயத்தில் இப்போர்பட்ட உதவிபுரிவதையும் மறுப்பேனா. திறந்து விடுங்களென் அவனும் வாசற்கதவைத் திறந்து உள்நுழைந்து தான் வைத்திருந்த வேலைக்காரி உடையையளித்து, என் தாயே! நீங்கள் இப்பொழுதிருக்கும் நிலைமையில் வெளிச்சென்றால் ஏதாவது ஆபத்து நேரிடும். அதனால் இந்தஉடையைத் தரியுங்களென்று கூறினார். மேனகாவும் மகிழ்வடைந்து, அறைக்குள் சென்று, தானணிந்திருந்த ஆடையாபரணங்களைக் கழற்றித் தரையில் வைத்துவிட்டு, வேலைக்கார உடைதரித்து பெரியவருடன் வெளியே வந்துவிட்டனள். வந்ததும் பெரியவர் மறுபடியும் கதவுகளைப் பூட்டிவிட்டு அம்மணீ! நீ சீக்கிரமாய் இதைவிட்டுச் சென்றுவிடு என்று கூறித் தானும் அரைநொடியில் எங்கேயோ ஒளிந்துவிட்டார். மேனகா பெரியவர் சற்றுநேரங்கூட நிற்காமல் ஓடிவிட்டதை நினைத்து ஆலோசித்துப் பிறகு எப்படியாயினும் சரி நாமிங்கு நின்றால் ஆபத்து நேரிடுமென எண்ணி, வேகமாய்நடந்து அந்த வீதியைக் கடந்து மற்றோர் வீதியில் வருகையில் அங்குநின்ற கிழவிஒருத்தி மேனகாவை நோக்கி, அடியம்மா இங்கேவா, உன்னைத்தான், என்று கூப்பிட்டாள். மேனகாவும் திகைத்து ஏன் பாட்டி கூப்புட்டீர்களென்று அருகில் வந்தாள்.

கி.—அம்மா உன்னைப்பார்த்தால் வேலைக்காரிபோல் தோன்றுகிறது. அதனாலழைத்தேன். உனக்கென்ன வேலை தெரியும்.

மே.—பாட்டி! என்னவேலை கொடுத்தாலும் தடையின்றி செய்வேன்.

கி.—அம்மா! குழந்தாய்! எனக்கு வீட்டிலெவ்ரும் கிடையாது. நான் நந்தவனம் வைத்துப் பயிராக்கிப் புஷ்பமாலை

கட்டி ஜீவனம் செய்கிறேன். எனக்கு வயதாகிவிட்டதனால் வேலைசெய்ய முடியவில்லை. அதற்காக ஒரு கூலியாள்வேண்டி வெகுநாளாய்ப் பார்த்துக் கொண்டிருந்தேன். நல்லகாலமாய் இன்று உன்னைச் சந்தித்தேன். உன்னுடைய சம்மதத்தைத் தெரிவிப்பாய்.

**மே.**—பாட்டி! கும்பிடப் போனதெய்வம் குறுக்கே வந்தது போல் நீங்கள் வந்தீர்கள். நான் ஒரு பரதேசி. நானும் வேலைக்காகத் திரிந்து கொண்டிருக்கையில் தங்களை யணுகினேன். தடையின்றித் தங்களிடம் வேலைகளைச் செய்கிறேன்.

**பா.**—உனக்கு என்னசம்பளம் வேண்டும்.

**மே.**—அம்மா! எனக்கு ஒரு பைசாகூட வேண்டாம். ஒருவேளை அன்னமளித்தால் போதும்.

**பா.**—அப்படியா மிகவும் சந்தோஷம். என் குழந்தையைப் போல் உன்னை ஆதரிப்பேன். நீ பயப்பட வேண்டாமென்று கூறித் தன் வீட்டிற்கழைத்துச் சென்றுவிட்டனள். மேனகாவும் அந்தக் கிழவிக்குவேண்டிய உபசாரணைகள் செய்து கொண்டு அவ்விடமேவ யமர்ந்துவிட்டனள். மேனகா வெளியேறி இரண்டுமணி நேரத்திற்கெல்லாம் தாசி, இளவரசனை யிட்டுக்கொண்டு நாலுபுறமும் கண்ணாடியினால் மூடப்பட்ட மோட்டாரிலேறித் தன் வீட்டிற்குவந்து, உள் நுழைந்து அங்கு வைக்கப்பட்டிருந்த ஆடையாபரணங்களைக் கண்டு, மேனகா தான் சொல்லுக்கிணங்கிக் குளிக்கச் சென்றிருக்கிறாளென்று எண்ணி ஆநந்தங்கொண்டு, இளவரசனை அங்குள்ள ஸோபாவிலமரச்செய்து, தான்பாத்ரூமிற்குச் சென்று, மேனகா, மேனகாவென்று கூவியழைத்தாள். ஆளிருந்தாலல்லவோ பதில் வரும். ஒன்றுமில்லை. உடனே கதவைத்திறந்து பார்க்க அதிலெவருமில்லை. மறுபடியும் தன் வீட்டிலுள்ள அறைகள் யாவற்றிலும் தேடி, மேனகாவைக் காணாமல் அச்சங்கொண்டு சிற்றரசனிடம் வந்து, அரசே! நான் என்னவென்று கூறுவேன் என்று பதட்டத்துடன் மொழிந்தாள்.

**அ.**—ஏன். என்ன சங்கதி.

தா.—நான் வெளியில் பூட்டின பூட்டு அப்படியே இருக்கின்றது. தப்பிச்செல்வதற்கு வேறுவழியும் கிடையாது. அப்படிக்கிருக்க உள்ளேயிருந்த ஆளைக்காணோம். அவள், பிசாசோ என்னமோவென்று ஏங்கிக்கூற உடனே அவன் வெகுகோபமுண்டு அடிபாபி! நான் உன் பொய்யான ஆசைமொழிகளில் மெய்மறந்து என்கிரீடத்தையும் எவருமறியாமல் அடகு வைத்துப் பவுன்களை வாங்கி உன்னிடம் கொடுத்தேன். கொண்டுவா அவைகளையென்று ஆத்திரத்துடன் மொழிய, அவள் தன் வஞ்சக அபிநயங்களுடன் பேசத்துவக்கி, என்னையாளுமரசே, நான் இதுவரையில் தங்களுக்கெவ்வளவோ பெண்களைக் கூட்டிக்கொடுக்கவில்லையா! நான் கைக்குவந்த கிளியைப் பத்திரமான கூட்டில் வைத்துத்தான் தங்களையழைக்க வந்தேன். நான் என்ன செய்வேன். அந்தக் கள்ளி தாங்களளித்த பவுன் பையை மாத்திரமெடுத்துக்கொண்டு, பறந்து போய்விட்டாளே! யென்று சாகஸஞ்செய்து நீலித்தனமா யழுதாள். சிற்றரசன் அவளைக் கண்டபடி தூஷித்துவிட்டுத் தான் சென்றுவிட்டான்.

---

## 7-ம் அத்தியாயம்.

தன்னுடைய ராஜ்யத்தைத்தேடி அலைந்துவந்த சந்திரன், ஓர் தேசத்திலுள்ள கடற்கரையையணுகி, அதன் விநோதங்களைக்கண்டு ஆநந்தமடைந்து சற்றுநேரம் அதிலிறங்கிவிளையாட ஆவல்கொண்டு, அப்படியே முழங் காலளவு தண்ணீரில் வந்து நின்று தன் கவலைகளையெல்லாம் மறந்து, ஈஸ்வரதிருஷ்டியைக் கண்டு ப்ரமித்து மெய் மறந்தவனாயிருக்கையில், ஒரு பெரிய அலை கர்ஜித்துவந்து சந்திரனை இழுத்துச்சென்றது. சந்திரன், யாதொரு ஏற்பாடுமின்றி நின்றதனால், பிசகேடாய் அலையில் சிக்கி யாதொன்றும் தோன்றாமல் திக்கு முக்காடி நீந்திக் கொண்டிருக்கையில் தெய்வச் செயலாய் அங்கு மிதந்துவந்த போட்டில்பிரிபட்ட கட்டையொன்றைக் கண்டு மகிழ்வடைந்து அதைத் தாவிபிடித்து அதனுதவியினால் கரை வந்துசேர்ந்து, இதுவும் ஒருகண்டமா எனநினைத்துக் குருவைத் தியானித்து, ஈரவஸ்திரங்களைப் பிழிந்து உலர்த்தி உடுத்திக்கொண்டுச் சற்று நேரம் களைப்பாறிப்பிறகு எழுந்து விதியின் வலியை நினைத்து வழிநடந்து, பல தேயங்களையும் கடந்து, **சகுந்தலாபுரியை** யடைந்து அதன் நாமதேயத்தை யறியவேண்டி அங்குநின்ற ஒரு கிழவனைநோக்கி ஐயாபெரியவரே இந்தநகரின் பெயர்யாது? என்று பணிவுடன் வினவினான்.

கி.—மவனே! இதைச் சகுந்தளாபுரியிண்ணு அளைப்பாங்க.

ச.—அப்படியா! இவ்வூரிலெதாவது விசேஷமுண்டோ?

கி.—அதல்லாம் நீயேன் கேக்கிரே. ஒன்னைப்பார்த்தா ராசா மவனாட்டமிருக்கே. இங்கனே என்வந்தே அப்பா.

ச.—ஐயா நான் ஒருபரதேசி. சும்மாத்தான் ஏதாவது அதிசயமுண்டாவென்று கேட்டேனே யல்லாமல் வேறல்ல.

கி.—சரிதான், உன்முவம் நல்ல எறக்கமுள்ளதாயிருக்குது. நாண் சொள்றதை நீ ஒருத்தரண்டையும் சொள்ளக்கூடாது. அது ரவசியம். அப்படின்னா சொள்வேன்.

ச.—நல்லது. அப்படியே யாகட்டும். சங்கதி வெளிவராது.

கி.—இப்படிவா. இங்கணேகுந்திகோ. இந்தவூரு பெரிய மவராசாவுக்கு ரொம்பஅளகா ஒருபுள்ளே பொறந்திச்சி, அவருக்கு மந்திரி ஒருத்தேன் பெரிய வஞ்சனகாரன்; அவென் கேளு, தன்மவனே ராசாவூட்டுலே விட்டுட்டு அந்தமவனெக் கொண்ணுபோடும்படிச் சொள்ளிட்டான். ஆனு, அதைக் கொல்லலே. உசிரோடேயே விட்டுட்டான்.

ச.—அடபாபி. அவன் கொல்லும்படி கூறினனே, பிறகு யார் உயிருடன் விட்டார்கள்.

கி.—அந்தஆளு என்செநேகிதன். ரொம்ப நெல்லவன். அவேன் அந்தப்புள்ளேக் கொண்ணுட மனசுவராமே காட்டிலே விட்டு எங்காவது பிளேக்கட்டுமிண்ணு வந்துட்டான். இது தான் இங்கணே விசேஷம்.

ச.—சரிதான். இப்பொழுதுயார் அரசுபுரிந்துவருகிறார்கள்.

கி.—ஆரா! மந்திரிபுள்ளேதான்.

ச.—நன்ருய் பரிபாலனம் செய்கிருனு?

கி.—அந்தளெவையேன் கேக்கிரே. முண்ணெக் காலத்திலே துலுக்கராசாக்கள் சேளத்து இன்னு ஒரு வரி வாங்கினுங்களாம். இவன் இரண்டுபங்குவரி வாங்குரான். அல்லாத்தையும் கூத்தியாவூட்டுலே கொட்டிரான். ரொம்ப கெட்டவன்.

ச.—ஆஹா சண்டாளன். பெரியவரே! மிக்கவந்தனம், நான் சென்று வருகிறேனென்றுகூறி விடைபெற்றுக் கொண்டு தன் ராஜ்ஜியத்தைக் கண்டுபிடித்த குதூகலத்துடன்சென்று ஒரு தடாகத்திலிறங்கி ஸ்னனபானுதிகளே முடித்து அந்த வஸ்திரத்தையே உலர்த்தி உடுத்திக்கொண்டு வேகமாய் அரண்மனையை யடைந்து அங்குநின்ற காவலாளனேயும் மதியாமல் உள்புகுந்து சபையடைந்து தன்பிதாவான பெரிய அரசனே மட்டும் வணங்கிநின்ருன். சந்திரனைக்கண்ட மந்திரிக்குத் தலை கவிழ்ந்துவிட்டது. இளவரசன் சந்திரனை நோக்கி யாரடா நீ கொஞ்சமும் மரியாதையின்றி தாராளமாகச் சபைக்குள் ப்ரவேசித்துத் தலைவணங்காமல் நிற்கின்ருய்என்று அதிகாரத்துடன் கூறினன்.

ச.—ஏன். நீயாரடா அது என்னைகேட்பதற்கு.

சிற்.—என்ன உனக்குஏதாவது பைத்தியமுண்டோ. இது ராஜசபை. வெளியில்போ.

ச.—பெரியஅரசன் யார்.

சி.—ஏன் நீ வணங்கினவர்தான்.

ச.—அப்படியா. நீ உண்மையில் இவ்வரசனுக்குப் பிறந்த பிள்ளையாநீ.

சி.—உண்மையல்லாமல் பொய் எதற்கு.

ச.—அடேபாபி ஏன்வீணாகப் பிதற்றுகின்றாய். என்னுடையஅரசை இதோ வஞ்சகமே உருவாயமைந்திருக்கும் படுபாவியான உன்தந்தை உனக்குக் கைப்பற்றி யிருக்கிறானென்று கூற அந்தச் சபையிலுள்ள யாவரும் வியப்படைந்து வாய் பேசாமலிருந்தனர். இதைக்கேட்ட போலிச் சிற்றரசன் கோபமேலிட்டு அடே நீயாரடா சனியன்போல் வந்திருக்கின்றாய். உடனே வெளியில்செல். இல்லாவிடில் காவலில் வைத்துவிடுவேன்.

ச.—நான்ஏன் இனிச்செல்வேன். நீ உன் தகப்பனான மந்திரியுடன் சென்றுவிடு. அல்லது கடவுளறிய சத்தியம்செய்.

சி.—தடையின்றிச் சத்தியம் செய்கிறேன்.

ச.—தன்பிதாவை வணங்கி, அரசே! என்பிதாவே!! தங்களுக்குக்கூட என்னைத் தெரியவில்லையா. தங்கள் சம்மதத்தைத் தெரிவிக்கவேண்டும்.

அ.—குழந்தாய்! எனக்கு இன்னதென்று எதுவும்புலப்படவில்லை. உன் னதிர்ஷ்டப்படியே செய்து சபையோருக் கெதிராக உன் உண்மையை ரூபிப்பாய்.

ச.—நல்லது. அடபயலே! நான் இந்தக் கல்லைக் கடவுளுக்குப் பொதுவாய்க் கீழே போடுகிறேன். இதை அசத்தியவான்கள் அசைக்கவும் முடியாது. நீ சத்தியவந்தனும், உண்மை இளவரசனுமானால் இதை எடுக்கவேண்டுமென்று குருவை நினைத்து ஸ்துதித்து அவரளித்த மணிக்கல்லைக் கீழேபோட, போலி சிற்றரசனால் (மந்திரி மகனால் அதை யணுவளவும் அசைக்க முடியவில்லை.

சி—அடேய்! நீ யேதோ ஜாலம் கற்றிருக்கின்றாய். இதெல்லாமென்னிடம் செல்லாது போவென்று அதட்டி கூற உடனே சந்திரன் சபையோர்களை நோக்கி நடந்த வரலாறுகள் யாவற்றையும் ஆதியோடந்தமாக உரைத்து இதற்கு நீங்கள் சம்மதியாவிடில் என் தாயை யிங்கு வரவழைங்களென அரசனு மதற்கிசைந்து தன் பட்டமகிஷியை யங்கு வரவழைக்க அவள் வந்ததும் ஸ்தன்னியபானம் பீரிட்டுச் சந்திரன் முகத்தினில் தெரிக்க, அதைக் கண்ட அம்மாது ஆச்சரியமடைந்து நாதா இதென்ன அதிசயம் அந்தப் பாலகன்மீது என் ஸ்தன்னிய பானம் தெரிக்க யாது காரணமென்றாள். அதற்குள் சந்திரன் ஓடிவந்து அம்மா! தங்கள் மகனைக்கூட அடையாளம் தெரியவில்லையா, நான் சிசுவாயிருக்கையில் தூபம்போட்டத் தங்கவட்டில் காலில்விழுந்து புண்ணாகித் தழும்பாக மாறினது ஞாபகமில்லையா என்று கூற உடனே அரசனு மரசியும் வியந்து போலி மகனை யழைத்து அவன் காலை நோக்கத் தழும்பு காணப்படாமையால் சந்திரனே உண்மை மகனென்று அறிந்து இருவரும் மகனைக் கட்டித்தழுவி உச்சிமோந்தனர். பெரிய அரசன் மந்திரியை நோக்கி அடே துன்மார்க்கா! சண்டாளா! உண்ட வீட்டிற்கிரண்டகம் நினைக்கும் பரம பாதகா! உன்னா லல்லவோ என் குழந்தை இத்தனை காலம் துன்பப்பட்டான். அடே பாபி! நீ செய்தன யாவும் உண்மை தானா என்றார். மந்திரி தப்புவதற்கு வழியில்லாமல் அரசன் காலில் பணிந்து மகராஜ்! நான் மூடத்தனத்தால் செய்துவிட்டேன் மன்னிக்கவேண்டும் என்று இறைஞ்சி வேண்டினான்.

அ.—குழந்தாய் சந்திரா! அவனால் துன்பமடைந்த நீயே அவனுக்குத் தகுந்த தண்டனை விதிப்பாய்.

ச.—பிதாவே நாம் ஏன் கொடுமை செய்யவேண்டும். கடவுளே அவனை சிக்ஷிப்பாரென்றதும் சந்திரனின் உதார குணத்திற்கு மெச்சிக் கரகோஷம் செய்தனர். மந்திரிக்கும், மந்திரி மகனுக்கும் சந்திரன் அநேக புத்திமதிகளைக் கூறி அரண்மனையிலேயே ஒரு சிறியவேலை அளிக்கும்படித் தன் பிதாவை வேண்ட அவருமதற்கு இசைந்தார்.

உடனே அநேக விலையுயர்ந்த பட்டாடைகளைத் தரிவித்

துச் சந்திரனை அணியச்செய்து தன் பக்கலில் உட்காரவைத்துக் கொண்டு சபையோரை நோக்கி ப்ரபுக்காள்! இதுகாறும் துன்பமடைந்து வந்துசேர்ந்த என் கண்மணியான சந்திரனுக்கு நாளையதினமே பட்டங் கட்டுவிக்க எண்ணுகிறேன். உங்கள பிப்பிராயம் யதோ அதைத் தெரிவியுங்களென்று கூற உடனே யாவரும் ஒரே மனதினராய் "ஜய விஜயீபவ" என்று கூறி எங்கள் யாவருக்கும் சந்தோஷமென்று கூறி ஆர்ப்பரித்தனர். உடனே சபை கலைந்தது.

மறுதினமே சந்திரன் பட்டாபிஷேகத்திற்காகச் சகுந்தலாபுரியைத் தேவலோகம்போல் சிங்காரித்து அரண்மனைவாயிலில் பெரியபந்தல்கள் போட்டு, மாவிலைத் தோரணங்கள்கட்டி, வாழை, கமுகு, நெட்டிலிங்கமுதலிய மரங்கள் நாட்டிப் பழதினுசுகள் யாவும்கட்டிக்குலை குலையாய் தேங்காய்கள், பனங்காய்கள், பாக்குக்குலை முதலிய யாவும்கட்டி மங்கள வாத்தியகோஷங்கள் தாம் தாமென்றுமுழங்க, வெகு ஆர்பாட்டத்துடன் நடந்தன. சந்திரனை திவ்யநதிப் பலன்களில் நீராட்டி, நவரத்தின மணிகள் பூட்டி, பீதாம்பரங்கள் உடுத்தி அழைத்துவந்து நவரத்தின மயமான சிங்காதனத்தில் வீற்றிருக்கச்செய்து புரோகிதர்கள்புடைசூழ, மங்கலிய ஸ்திரீகள் மங்களம்பாட, அந்தணர் களாசிகூறப், பெரிய அரசன் தன் முடியை எடுத்துச் சந்திரன் சிரசில் தரித்துச் செங்கோலைக் கையிலளித்து வாழ்த்தினன். ஜனங்கள் யாவரும் ஆநந்தவாரியில் மூழ்கி அரசனாலளிக்கப்பட்ட தானங்களை எதேஷ்டமாய் பெற்றுக் களிப்படைந்து அன்றைய தினம் நடந்தவிருந்திற்குச் சாப்பிடச் சென்றனர். மேனகாவும் கிழவியுடன் வந்திருந்தாள். விருந்து பரிமாறப்பட்டு யாவரும் புசித்துக்கொண்டிருக்கையில் சந்திரன் வந்த ஜனங்கள் யாவற்றையும் உற்றுப் பார்த்துக்கொண்டே வந்து நம் மேனகாவையும் கண்டான். மேனகா தன்னெதிரில் அரசன்நிற்பதைக் கண்டுலஜ்ஜையடைந்து தலை குனிந்தவண்ணமிருக்க என்ப்ரியே மேனகாவென்றுவரும் சப்தத்தைக்கேட்டுத் திடுக்கிட்டு தன் காதலனென்றறிந்து எழுந்து என் நாதனேயென்று கூறிச் சந்திர

ணின் பாதங்களில் வணங்கினாள். ப்ரஜைகள் யாவரும் ப்ரமிக்க அதைக்கண்ட இளவரசன் நடந்த சங்கதி யாவற்றையும் சவிஸ்தாரமா யெடுத்துரைத்துச் சொல்ல யாவரும் இளவரசியும் வந்ததைப்பற்றிக் களிப்பெய்தினர். மேனகாவுக்குச் சந்தோஷ மிகுதியால் பேச நாவெழவில்லை. சந்திரன் தன் தேவியை யழைத்துக்கொண்டு மறுபுறமாக வந்து அங்கு ஆடவர் உடையுடனிருக்கும் ஒருத்தியைக் கண்டு மேனகா! உன் தோழியின் கோலத்தைக் கண்டாயா என்றான். உடனே யவளுமெழுந்து சந்திரனை நமஸ்கரித்து மேனகாவைக் கட்டித் தழுவிக்கொள்ள மேனகா இணையில்லா ஆநந்தமடைந்து என்னுருயிர்த் தாயே! தாராவதி! என் சகியே!! நீ எப்படி யிங்கு வந்தாய். என் இந்த வேஷ மென்றாள்.

**தா.**—என் விலையில்லா மாணிக்கமே! நீங்கள்சென்ற மறு தினம் உன்தந்தை என்னிடம்வந்து ப்ரலாபித்தார். நான் உன் கணவரது கட்டளையின்படி யாவற்றையும்கூறி அவரளித்த லிகிதத்தையும் கொடுத்தேன். அவரதைப் படித்துவிட்டு உங்கள் பிரிவாற்றாமையினால் ரொம்ப துக்கித்து என்னை நோக்கி நீ எப்படியாவது சந்திரனையும், மேனகாவையு மழைத்துவரவேண்டு மென்றுகூற நானும் மறுதினமே புறப்பட்டுக் கானகமார்க்கமாய் உங்களைத்தேடி வந்துகொண்டிருக்கையில் அகஸ்மத்தாய் மேலிருந்துவிழுந்த உன்னைக் கையிலேந்தினேன்.

**மே.**—ஆஹா! என் பிரிய சகியே!! நீயா என்னை யாதரித்தாய் உன் வேஷத்தின் கொடுமையால் உன்னை இன்னாரென அறிந்துகொள்ளாமல் போய்விட்டேன். நீயாவது என்னிடம் உண்மையைக் கூறக்கூடாதா. பிறகு எங்கு சென்றாய்.

**தா.**—மேனகா கூடவிருந்தால் சரிவராதென்று மனதில் பட்டதினால் உன்னைப் பின்தொடர்ந்தேவந்து புலியினிடமும், புஜங்கனிடமும், தாசியிடமும் தப்பவைத்துப் பிறகு இக்கிழவியிடம் நீ சுகமாக விருக்கிறாயென்பதைக் கண்டு நானுமிங்கேயே காலங் கழித்துவந்தேன். இன்றுடன் நம்மைப் பிடித்த ஏழரை நாட்டான் விலகிவிட்டானென்னாள். யாவரும் களிப்பினால் ஆரவாரித்தனர். சந்திரன் மேனகாவையும், தாராவதியையு மழைத்

துக்கொண்டு தாய், தந்தையிடம் வந்து மேனகாவின் சரிதை யையும், தாராவின் உதவிச் செயல்களையும் கூறினான். அரசனு மரசியும் மருமகளைக் கண்டு ஆநந்தித்து மேனகா, தாரா இரு வரையு மழைத்துச் சென்று நீராட்டி திவ்ய வஸ்திராபரணங் கள் அளித்தனர். அரசன் சந்திரனை நோக்கி உன் பட்டாபி ஷேகத்துடன் விவாகமும் கிட்டிற்று. இங்கேயே திருமணம் முடித்துவிடலாமா வென்றார்.

ச.—தந்தாய் நான் எதற்கும் மேனகாவின் தந்தையான மோகினிபுரி அரசனிடம் சென்று அவருடைய விருப்பத்தை யறிந்துகொண்டு மணம்புரிகிறேன். நீங்களும் என்னுடன் வரவேண்டுமென, யாவரும் சந்திரனின் விருப்பத்திற் கிணங்கி னர். சந்திரன் தாய், தந்தை, தாரா முதலிய யாவரையும் நேராக மோகினிபுரிக்கு அனுப்பித் தான்மாத்திரம் மேனகாவுடன் வஜ்ர, வைடூரிய பட்டுப்பீதாம்பரங்களைப் பாத காணிக்கையாக எடுத்துக்கொண்டு கானகத்திலுள்ள குருவினிடம்வந்து வணங்கி நின்றான் அவர் சந்திரனின் அன்பிற்கு மெச்சி இருவரையும் ஆசீர்வதித்து சந்திரா! உன் மாமனான மகாநந்தன் மிகவும் ஆபத்தான யுத்தமுனையி லிருக்கிறான். நீ இன்னுமிரண்டு நாழி கையி லங்கு செல்லாவிடில் உயிரும், ராஜ்யமும் போய்விடும் என்றார்.

ச.—தயாநிதே! தங்களனுக்ரகமிருந்தால் எதற்கும் பய மில்லை. கிருபை செய்யவேண்டும்.

மு.—சந்திரா. கவலைப்படாதே. நான் ஒரு புரவி கொடுக் கிறேன். அதன் மீது ஏறினால் அடுத்தவினாடியில் மோகினி புரியை அடையலாம். ஓர் மந்திரவாள், அளிக்கிறேன். அதைச் சுழற்றினாயாகில் விரோதிகள் யாவரும் மடிந்துவிடுவார்கள், என்று கூறித் தன் தவவலிமையினால் ஒரு அஸ்வமும், வாளும் வரவழைத்துக் கொடுத்தார். நேசர்களிருவரும் ரிஷிபுங்கவரி டம் விடைபெற்றுப் புரவியின்மீது ஆரோகணிக்க, அது உடனே ஏரோப்ளேனைப்போல் கானக மார்க்கமாய்ப் பறந்து அடுத்த நிமிடத்தில் மோகினிபுரி யுத்தகளத்தில் வந்து நின்றது. சந்திரனும் வாளினுதவியால் விரோதிகளை வென்று, மேனகா

வுடன், மகாநந்தன் இருக்குமிடம் வந்து பணிந்தான். விரோதி கள் மடிந்ததையும் சந்திரன் வந்ததையும் கண்ட மகாநந்தன் சந்திரன்தான் வென்றிருப்பானென்றெண்ணி மகிழ்ச்சியடைந்து இருவரையும் கட்டித்தழுவி என் குழந்தைகாள் உங்களை உயிரு டன் காணும்படியான பாக்கியம் பெற்றேனே. நான் அச்சண் டாளியின் வஞ்சனையில் மயங்கி ஏதாவது கூறியிருந்தாலும் மன் னிக்கவேண்டுமென்றான். யுத்தகளத்தில் ஜயபேரிகை முழங் கிற்று. மேனகா தன் சிற்றன்னையெங்கேயென்று ஆவலுடன் கேட்டாள்.

அ.—என் கண்மணியே. நான் அவளை என் கையினால் கொல்லாமல் சிறையிலடைத்துவைத்திருந்தேன். அவள் தானா கவே உயிரை மாய்த்துக்கொண்டாளெனச் சந்திரனும் மேனகா வும் வருத்தமுற்றனர். அரசன் சந்திரனை நடந்த சங்கதிகளை யெல்லாம் கூறும்படிக் கேட்டு, ஆநந்தித்து, மகளுக்கு விவாகம் செய்ய ஏற்பாடு செய்தார்.

மகாநந்தனின் கட்டளைப்படி அரண்மனையானது செம்மை யா யலங்கரிக்கப்பட்டது. பட்டினத்து ஜனங்கள் யாவரும் மாகடங்களையும், மாசுகளையும் துடைத்தனர். வாழை கமுகுகளை வரிசை வரிசையாக நாட்டினர். தெருக்களில் பச்சைப் பூப் பந்தற்களை பரக்கவமைத்தார்கள். வீதிகள் தோறும் வாத்திய வொலி யெழுப்பினார்கள். சந்திரனின் தாய் தந்தை மற்றும் கூடவந்த ப்ரஜைகள், தாராவதி யாவரும் வந்து சேர்ந்தனர். மகாநந்தன் யாவரையும் நல்வரவேற்று உபசரித்தான். சந்திரன் திருமணத்தன்று, புண்ணிய தீர்த்தங்களில் நீராடி ரத்தினாபர ணங்கள் பூண்டு, பூமாலைகளணிந்து, பட்டத்து யானைமேலமர்ந்து பவனிவந்து, மணவறைச் சேர்ந்து, அங்கு சர்வாலங்கிருத பூஷிதையாய் நின்ற மேனகாவை, யாவர் முன்னிலையிலும் கைப் பிடித்தான். சந்திரனின் கட்டளைப்படி அதே சமயத்தில் மந்திரி மகனுக்கும் தாராவதியை அளித்து, விவாகம் நடந்தேறியது யாவரும் புளகாங்கிதராகி ஆநந்தமடைந்தனர். மகாநந்தன் தன்னுடைய அரசைச் சந்திரனுக்கே முடி சூட்டுவித்தான்

சந்திரன், மந்திரி மகனான, தங்கப்ராதபனையும், தாராவதியையும் மோகினிபுரியைப் பரிபாலிக்கும்படி ஆஞ்ஞாபித்துத் தான், தாய், தந்தை, ம[illegible]ந்தன், மேனகா, யாவருடனும் ப்ரயாணப்பட்டுச் சகுந்தலாபுரியை யடைந்து மன்னுயிரைத் தன்னுயிர்போல் பாலித்து புத்திர, பௌத்திர களத்ராதிகளுடன் மனுநீதி தவறாமல் அரசுபுரிந்து இன்பமாய் வாழ்ந்து வந்தான்.

சுபம் ! சுபம் !! சுபம் !!!




## முடிவுரை.

" மண்ணிலாரண மிகரென வியாதனார் வகுத்த
வெண்ணிலா நெருங்காதையை யானறிந்தியம்பல்
விண்ணிலாதவன் விளங்குநீடெல்லையையூமன்
கண்ணில்லாதவன் கேட்டலும் கண்டலும் கடுக்கும்."

இங்ஙனம்

நூலாசிரியன்.

Printed at the Wednesday Review Press, Trichinopoly.